# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-௫௨] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௮ கார்த்திகை. (Dec. 77) | பரல் - [illegible]

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



தமிழ்நாடு முதலமைச்சருடன் குடியரசுத் தலைவர்
வானூர்தியில் புயலால் அழிவுற்ற பகுதிகளைப் பார்வையிடல்



13, 14-11-77இல் வெள்ளத்தால் இழப்புற்ற
திருச்சிப் புனித யோசேப்புக் கல்லூரி

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ருஉ | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦அ, கார்த்திகை டிசம்பர் 1977 | பரல் ௬ |
|---|---|---|


## பெரும்புயலால் விளைந்த பேரிழப்பு

"நீர்மிகின் சிறையும் இல்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்றும் நிழலும் இல்லை
வளிமிகின் வேளியு மில்லை" (புறம்: 51)

ஐயூர் முடவனார் என்னும் புலவர் பெருமான் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி என்னும் பாண்டிய வேந்தனின் ஆற்றலை விளக்க மேற்காணும் பாடற்பகுதியை உவமையாகக் கூறியுள்ளார். ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர்ப் பாடப்பட்ட அப் பாட்டின் பொருள் இன்றும் உண்மையாதல் நாம் கண் கூடாகக் காணக்கிடக்கின்றது.

அண்மையில் தமிழ்நாட்டிலும் மற்றும் தென்னிந்திய மாநிலங்களிலும் பெருவெள்ளமும் கடுங்காற்றும் விளைத்த இன்னல்களும் இழப்புகளும் அளவிடற்பாலன வல்ல! ஊழிக் காலம் இதுவேயோ என்று எண்ணி நடுங்கத்தக்க வண்ணம் உயிரினங்களும் பயிரினங்களும் அழிந்தும் சிதைந்தும் பெருந்துயருற்றும் கிடக்கும் அவலக்காட்சி நெஞ்சை உருக்கும் நீர்மையதாய் உள்ளது. தொடர்ந்த மழையும், கடற் கொந்தளிப்பும், சூறைக்காற்றும் சேர்ந்து பரவலாகத் தென்னாடு முழுதினும் விளைத்திருக்கும் கொடுமைகள் இப் பொழுது உயிர் வாழ்ந்துகொண்டிருப்பவர் எவருடைய பட்டறிவுக்கும் அப்பாற்பட்டதாய் இருக்கின்றன.

**நாகப்பட்டினம்:**

தமிழ்நாட்டின் இரண்டாவது துறைமுகப் பட்டினமாகவும் திருமுறைப் பாடல்பெற்ற காயாரோகணேசுரர் திருக்கோயில்

விளங்கும் எழில் நகராகவும் விளங்கும் சிறப்பு வாய்ந்த நாகை வெள்ளத்தாலும் சூறைக்காற்றாலும் பெரிதும் சீரழிக்கப் பட்டுள்ளது. இருப்புப் பாதைகளும், பெருவழிச் சாலைகளும், தொலைபேசித் தொடர்புகளும்,மின்சார இணைப்புக்களும் துண்டிக் கப்பட்ட நிலையில் தனித்தீவுபோலான நாகையில் மக்களும் மற்றும் சிற்றுயிர்களும் பட்ட கொடுமைகள் பலப்பல. இடிந்த வீடுகளும் மடிந்த உயிர்களும் பற்பல.

திருச்சி—திருவரங்கம் :

காவிரியும், கொள்ளிடமும் கைகோத்து நின்று வளங் கூட்டி எழிலூட்டும் திருச்சிராப்பள்ளி திருவரங்க நகரங்களும் அவற்றைச் சூழ்ந்த பகுதிகளும் ஓவா மழையாலும் உடைப் பெடுத்த ஆற்றுவெள்ளத்தாலும், ஆற்ற முடியாத காற்றின் முடுக்கத்தாலும் அலமந்து கிடக்கின்றன. வாழைத் தோப்புக் களும் கரும்புத் தோட்டங்களும், நெல் வயல்களும் பொலி வழிந்தும் பயனிழந்தும் கிடக்கின்றன. உணவும் உறையுளும் இன்றிப் பன்னூறாயிரம் மக்கள் திருச்சி மலைக்கோட்டையில்— தாயுமான பெருமான் திருக்கோயிலில் அடைக்கலம் புகுந்து இருநாள்காறும வெளியேற மாட்டாமல் இருந்திருக்கின்றனர். திருவரங்கம் திருக்கோயிலுள்ளும் வெள்ளம் புகுந்தமை குறிப் பிடத்தக்கது.

திருச்சித் தூய யோசேப்புக் கல்லூரி முதலிய விடங்களிலும் வெள்ளம் புகுந்ததோடு ஆங்கிருந்த நூல்நிலையங்களில் இருந்த நூல்கள் பல அழிந்துவிட்டன. கிடைத்தற்கரிய கருவூலங்களான நூல்களின் அழிவு பேரிழப்பாகும். அது பற்றிக் கழகம் தன் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றது.

குடகனாறு அணை :

மதுரை மாவட்டத்தில் வேடசந்தூரில் கட்டப்பட்டிருந்த குடகனாற்று அணை உடைந்து விட்டமையால் எதிர்பாராத அப் பெரு வெள்ளத்தைத் தாங்கமாட்டாமல் நாற்பத்தொரு சிற்றூர்கள் அழிந்துவிட்டன. மக்களும் ஆடுமாடுகளும் ஏராளமாக இறந்துள்ளமை பெரிதும் வருந்தத்தக்கது.

ஏரிகளும் குளங்களும் :

மதுரை மாவட்டத்தில் ஏரிகளும் குளங்களுமாக எண்ணூற்று அறுபத்து நான்கு நீர்நிலைகளும், நெல்லை மாவட்டத்தில் நூற்றுஆறு நீர்நிலைகளும் புதுக்கோட்டை

மாவட்டத்தில் அறுபத்து நான்கு நீர்நிலைகளும், செங்கை மாவட்டத்தில் அறுபது நீர்நிலைகளும் தஞ்சைமாவட்டத்தில் ஐம்பத்தேழு நீர்நிலைகளும், வடார்க்காடு மாவட்டத்தில் நான்கு நீர்நிலைகளும் உடைப்பெடுத்துக் கொண்டனவென்று செய்தித் தாள் குறிப்புகள் கூறுகின்றன. ஏனைய மாவட்டங்களை விடத் தஞ்சை திருச்சி மாவட்டங்களை மழை வெள்ளத்தால் மட்டுமன்றிச் சூறைக்காற்றாலும் தாக்கப்பட்டுள்ளனவென்பது குறிப்பிடத்தக்கது.

**பாழான நத்தங்கள் :**

நன்செய்வளங்கொழிக்கும் தஞ்சை மாவட்டத்தில் சிற்றூர்கள் பல நீரில் மூழ்கிக்கிடக்க நேரிட்டுள்ளது. குறுவை விளைச்சல் அறுவடை செய்யப்படவேண்டிய நிலையில் வெள்ளத்தில் மூழ்கியும் அழுகியும் நென்மணிகள் முளைகண்டும் பலவாறு சேதமடைந்துள்ளது. கரையகத்து மரங்கள் பல ஒடிந்தும் சாய்ந்தும் மடிந்து கிடக்கின்றன.

**கோயில் முழுகியது :**

கரூர்க்கருகில் குடகனாறும் கலையனாறும் கூடுமிடம் வெஞ்சமாக்கூடல் என்று வழங்கப்பட்டு வருகின்றது. இவ்வூரிலுள்ள திருக்கோயில் வெஞ்சன் என்னும் வேடர் தலைவனால் வழிபடப்பட்டமையால் இப் பெயர் பெற்றதென்பர். சுந்தரரால் இக் கோயில் பதிகம் பாடப்பட்டுள்ளது; அப்பரும் குறிப்பிட்டுள்ளார். இது கொங்கு நாட்டுத் திருக்கோயில்கள் ஏழனுள் ஒன்று. இக் கோயில் வெள்ளத்தில் மூழ்கிவிட்டது. வெள்ளம் வடிந்தபின் பார்த்தபோது கோபுரமே காணப்படவில்லை. அம்மையின் திருவுருவச் சிலை வளைந்து கிடந்தது. வேறு ஏழு ஐம்பொன் சிலைகள் ஒருவாறு கண்டுபிடிக்கப்பட்டன. சிவலிங்கம் மட்டும் அப்படியே இருந்தது. திருவாரூர்ப் பெரிய கோயில் கோபுரத்தில் இருந்த கலசங்கள் மூன்று காற்றால் அடித்துத் தள்ளப்பட்டுள்ளன

**சென்னை மாநகர் :**

தமிழ் நாட்டின் மற்றப் பகுதிகளை நோக்கச் சென்னையின் அழிபாடு குறைவே. ஆயினும், எண்ணூர் முதலிய வட சென்னைப் பகுதிகளில் இருந்த குடிசைகள் பல வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டுள்ளன. முன்னேற்பாடுகளும் எச்சரிக்கைகளும் செய்யப்பட்டிருந்தமையால் சேதம் அதிகம் ஏற்படவில்லை என்று கூறலாம்.

**சேதம் :**

தமிழ் நாட்டுக்கு நேர்ந்த இந்த இடரால் ஏற்பட்டுள்ள சேதம் வரையறைக்குட்படுவதன்று. இறந்தவர்கள் எண்ணிக்கை அரசினர் கணக்கின்படி ஐநூற்றுப் பத்தொன்பது ஆகும். பல்லாயிரவர் இறப்பு இவ்வெண்ணிக்கையில் சேரவிலலை என்பது செய்தித்தாள் குறிப்புக்களால் அறிய முடிகின்றது. மக்கள் மட்டுமோ? ஆடு மாடுகள் முதலிய கால்நடைகளின் இழப்பு கணக்கிட முடியுமோ? வீடுகளும், வீட்டுப் பொருள்களும், பயிர் பச்சைகளும் அழிந்தமையை அளவிட்டுரைப்பார் யார்?

**புதுவை மாநிலம் :**

புதுவை மாநிலத்திலும் பெருஞ்சேதம் விளைந்துள்ளது. பத்தாயிரம் குறுக்கம் (ஏக்கர்) அறுவடைக்கான நெற்பயிர் அழிந்துள்ளதாகச் செய்தித்தாள்கள் கூறுகின்றன. மீன்பிடி படகுகள் சிலவும் அவற்றிற் சென்ற மீனவர்கள் சிலரும் மீளவில்லையாம்.

**ஆந்திர மாநிலம் :**

19-11-77 அன்று கீழைக் கடலில் உருவாகியிருந்த பெரும் புயல் சென்னை மாநகரை நோக்கி வீசக்கூடும் என்று எதிர் பார்க்கப்பட்டது. தக்க முன்னேற்பாடும் எச்சரிக்கைகளும் செய்யப்பட்டிருந்தன. சீறிவந்த அப் பெரும்புயல் ஒருவாறு திசைமாறித் தெலுங்கு நாடாகிய ஆந்திர மாநிலத்தை மிகுதியாகத் தாக்கிவிட்டது. ஆங்கு உயிரிழந்த மக்கள் தொகை மட்டும் பன்னீராயிரத்துக்கும் மேலாம் எனின் அச் சூறாவளியின் கடுமையையும் கொடுமையையும் அளவிட்டுரைக்க வொண்ணுமோ?

ஆந்திர மாநிலத்தின் வளமான பகுதியாகிய 'கிருட்டிண' மாவட்டம் — அதிலும் 'திவி' என்னும் வட்டம் பெரிதும் அழிவுபட்டுள்ளது.

இயற்கையின் சீற்றத்தால் நேர்ந்துள்ள கொடுமையின் விளைவாக ஆந்திர மாநில அமைச்சர்கள் ஐவர் பதவி விலக முன்வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**கேரள மாநிலம் :**

கேரள மாநிலத்தில் அதன் தலைநகரான திருவனந்தபுரமும் மேலைக் கடற்கரையும சூறைக்காற்றின் கொடுங் கைகளில் சிக்கியுள்ளன. கடலோரப் பகுதியில் குடிசைகள் காற்றில்

அடித்துச் செல்லப்பட்டுள்ளன. ஒரு கோடி ரூபா மதிப்புள்ள விசைப் படகுகிகள் அழிந்துவிட்டன. கல்பேனி என்னும் தீவு அடியோடு அழிந்துவிட்டது. தென்னந்தோப்புகள் முதலியன சேதமடைந்துள்ளன. இலக்கத் தீவுகளும் சேதப்பட்டுள்ளன. தமிழ்நாட்டையும் தெலுங்கு நாட்டையும் நோக்க மலையாள நாட்டில் தாக்குதல் குறைவெனினும் அங்குள்ளோர் கடந்த நூறாண்டுகளில் இத்தகைய வெள்ளமும் காற்றும் வந்ததில்லை என்கின்றனர்.

**கருநாடக மாநிலம் :**

கன்னட நாட்டில் புயல் வெள்ளம் பெரிதும் தாக்கவில்லை யெனினும் மேலைக் கடற்கரையில் மங்களூரை அடுத்த பகுதி யில் ஓரளவு காற்று வீசியுள்ளது. சேதம் ஏதும் இல்லை என்று தெரிகின்றது.

**தமிழ்நாட்டரசு :**

இயற்கையின் கொடிய தாக்குதலால் பெருஞ்சேதத்திற்கிட மான தமிழ்நாட்டில் மாண்புமிகு முதலமைச்சர் ம. கோ. இராமச் சந்திரன் அவர்களும் மற்றும் அமைச்சர் பெருமக்களும் அதிகாரி களும் அரசியல்கட்சித் தலைவர்களும் பிறரும் உடனடியாகப் பற்பல நடவடிக்கைகளை மேற்கொண்டு துயர்துடைப்புப் பணியில் முனைந்துள்ளமையும், அனைத்துக் கட்சி அறிவுரைக் குழு அமைத்திருப்பதும் பெரிதும் பாராட்டத்தக்கன.

நிகழ்ச்சிக் காலத்தில் ஆங்காங்குத் துன்பநிலையில் இருந் தோரை மீட்டும், விண்ணூர்தி வாயிலாகவும் பிறவாறும் உணவு வழங்கியும், இறந்துபட்டவர்தம் உடலங்களை அடக்கம் செய்தும் பணியாற்றியுள்ளனர்.

பட்டாளத்து வீரர்கள் தக்கவண்ணம் பணிமேற் கொண்டு, சிதைவுபட்ட நாகை முதலிய இடங்களை உடனடி யாகச் செப்பனிட்டுள்ளனர்.

**நடுவணரசு :**

இந்தியக் குடியரசுத் தலைவர் மாண்புமிகு சஞ்சீவ ரெட்டி அவர்களும், தலைமையமைச்சர் மாண்புமிகு மொரார்சி தேசாய் அவர்களும், மற்றும் பாதுகாப்பு அமைச்சர் செகசீவன்ராம், உள்ளாட்சித்துறை அமைச்சர் சரண்சிங், தொடர்வண்டித்துறை அமைச்சர் மதுதண்டவதே, மின்துறை அமைச்சர் பா. இராமச்

சந்திரன் ஆகியோர் தமிழ் நாட்டில் சுற்றுப்போச்சுமேற்கொண்டு சேதப் பகுதிகளைப் பார்வையிட்டு அல்லற்படுவோர்க்கு ஆறுதல் கூறியுள்ளனர். நடுவணரசின் ஆய்வுக்குழு சேதநிலையைப் பற்றிய அறிக்கை கொடுத்துள்ளது.

தலைமையமைச்சர் துயர்துடைப்புப் பொருளினின்று பத்து நூறாயிர ரூபா உடனடியாக வழங்கியுள்ளார். அரசின் சார்பில் கணிசமான தொகை வழங்கப்பட்டுள்ளது. தமிழ் நாட்டுக்குச் சிறப்பு ஒதுக்கீடாக ஐம்பதினாயிரம் டன் அரிசி வழங்கியுள்ளனர். இதில் ஐயாயிரம் டன் இலவய ஒதுக்கீடு ஆகும்.

**இன்றியமையாப் பொருள்கள் :**

தமிழ் நாட்டரசு வீடு இழந்தோருக்கு வீடு கட்டிக்கொள்ள உதவித் தொகையும் கடன் தொகையும் வழங்கி வருகின்றது. அன்றியும் தமிழ்நாட்டு ஆளுநர் மேதகு பிரபுதாசு பட்டுவாரி அவர்கள் தென்னையோலை பனையோலை, மூங்கில், கம்பு, நார், கயிறு ஆகிய கட்டடப் பொருள்களை இன்றியமையாப் பொருள் களாக அறிவித்துள்ளார்; அவற்றின் விலையைக் கட்டுப்படுத் தவும் ஆவன செய்துள்ளார்.

**தொண்டு நிறுவனங்கள் :**

நாட்டுக்கு நேர்ந்துள்ள இடர்நிலையினின்றும் மீளுதற்குச் செங்குறுக்கைக் கழகம், இராமகிருட்டிணர் கழகம் முதலிய தொண்டு நிறுவனங்கள் பெரிதும் பணியாற்றியுள்ளன. குடந்தையில் உலகத் தமிழ்க் கழகத்தினர் பணமும் பிறபொருள்களும் திரட்டி வழங்கியுள்ளனர்.

**வெளிநாட்டு உதவிகள் :**

இந்தியத் துணைக்கண்டத்தின் துயர்நிலையறிந்து அமெரிக்கா, பேற்கு செருமனி, சப்பான் ஆகிய நாடுகள் கணிச மான பொருளுதவி வழங்கியுள்ளன. அமெரிக்கக் குடியரசுத் தலைவர் மாண்புமிகு கார்ட்டர் அவர்கள் வருத்தந் தெரி வித்துள்ளார்.

இங்கிலாந்திலுள்ள முதியோர் தொண்டுக்கழகம் ஐந்து டன் போர்வையை வழங்கியுள்ளது. அமெரிக்க நாட்டுப் பல்வேறு கிறித்தவ நிறுவனங்களும் ஏறத்தாழ அறுபத்தைந்து நூறாயிரம் ரூபா வழங்கியுள்ளனர்.

**பல்வேறு உதவிகள் :**

தமிழ்நாட்டில் பல்வேறு நிறுவனங்களும் தனியார் சிலரும் பொருளுதவி வழங்கியுள்ளனர். சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்கள் தம் ஒருமாதச் சம்பளத்தை உதவித்தொகையாக அளித்துள்ளனர். தமிழ்நாட்டில் முதன்மையான எதிர் கட்சியாக உள்ள தி. மு. க-வினர் முதன் முதலில் ரூபா இருபத்தையாயிரம் கொடுத்துள்ளனர். மேலும் பொருள் திரட்டிக்கொண்டு வருகின்றனர். திருவாவடுதுறை மடவளாகத் தலைவர், திருவலம் அடிகளார் போலும் சமயப் பெரியோர்களும், கணிசமான பொருளுதவி செய்துள்ளனர். திரைப்படக் கலைஞர்கள், நாடகக் கலைஞர்கள் முதலியோர் தாமே பொருளளித்தும், திரட்டியளித்தும் உள்ளனர். திரையரங்க உரிமையாளர்கள் ஒருநாள் வருவாயை வழங்கியுள்ளனர். பற்பல அலுவலகத்தினரும் தம் வருவாயின் ஒரு பகுதியை வழங்கியுள்ளனர். மற்றும் பலரும் உதவியுள்ளனர்.

வெள்ளத்தாலும் சூறைக்காற்றாலும் உற்றார் உறவினரை இழந்தும், வீடுகளை இழந்தும், பல்வேறு இழப்புகளுக்கு ஆளாகியும் அல்லலுறுவார்க்கு நம் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம். எல்லாரும் பலநலமும் பெறத் திருவருள்புரியுமாறு இறைவன் திருவடிமலர்களை இறைஞ்சுகின்றோம்.

———

## கூற்றாகி வந்த கொடும் புயல்!

[ புலவர் பொ. முனியப்பன், கூவலூர் ]

காற்றுமழை யுடனெழுந்த கடுங்கயமைக் கொடுங்கடலே!
ஆற்றலினால் உயிர்குடித்தாய் அரும்பொருளை உடைத்தெறிந்தாய்
போற்றுமிளங் குழவிதனைப் புதுப்பெண்ணை நினையாமல்
சீற்றமுற்றாய் சிறுமைசெய்தாய் பயனையெல்லாஞ் சிதைத்தாயே. க

மலையாக அலையெழுந்தாய் மடியாமல் பிழைப்பதுண்டோ
நிலமக்கள் தமையெல்லாம் நிமையத்தில் அழித்தொழித்தாய்
கலைமலிந்த வளர்மரங்கள் கனக்கின்றி விழவைத்தாய்
முளைத்தெழுந்த பயிரையெல்லாம் முனைந்துவந்து சிதைத்தாயே. உ

போர்க்களத்தைப் புறங்காணும் நிகழ்ச்சிகளைப் புரிந்துவிட்டாய்
சீர்நிறைந்த கால்நடைகள் இறந்துருளச் சினந்துவிட்டாய்
ஊர்களினை மணல்மூட உருத்தெழுந்து விழுந்துவிட்டாய்
நேர்ந்தறியா இழப்பாலெம் நிமிர்ந்தநிலை சிதைத்தாயே ங

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௫௨, பரல் ௯, பக்கம் ௧௧௬இன் தொடர்ச்சி)

இதற்கு ஒரு காரணமும் ஆசிரியர் கூறுகிறார்; "அதுதான் மல சொரூபத்தில் மறைந்து அருப சொருபியாய் நிற்றலால்" என்பது.

ஆன்மா மல வடிவத்தில் மறைந்து அருவமாய் நிற்கின்றது; ஆதலால், ஐந்தவத்தைப்பட நேர்கின்றது என்பது கருத்து.

இங்கே ஒரு கேள்வி பிறக்கலாம்; 'ஆன்மா ஐந்தவத்தைப் படும்' என்றால், அதன் பரவலுக்கு (வியாபகத்துக்கு) 'இழுக்காய் முடியுமே' என்ற தோற்றும். மாயைக் கருவிகளொடு ஒன்றி நிற்றலையே இங்கே அருவமாய் நிற்றல் என்று சொல்லப்பட்டது. அக் கருவிகள் தொழிற்படும்போது ஆன்மாவும் அவ்வாறே தொழிற்படுகின்றது. கருவிகள் தொழிற்படும்போது ஆன்மாவின் அருவம் கருவிகளின் உருவமாகும்.

இதற்கு விளக்கச் செய்யுள் ஒன்று வருகின்றது.

"ஒன்றணையா மூலத்து உயிரணையும் நாபியினில்
சென்றணையுஞ் சித்தம் இதயத்து—மன்றஏய்
ஐயைந்தாம் நன்னுதலில் கண்டத்தில் வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு".

நன்னுதலில் - இனிய நெற்றி நடுவாகிய புருவநடுவில்; வாக்காதி - வாக்கு பாதம் கை எருவாய் கருவாய் என்பனவும், மெய்யாதி - மெய் வாய் கண் மூக்கு செவி என்பனவும், மன்ற ஏய் - பெரிதும் பொருந்துகின்ற; ஐயைந்தாம் - (உரை முதலிய செயற்கருவிகளின் செயலைந்தும் ஊறு முதலிய அறிகருவிகளின் செயல் ஐந்தும், மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் அகக்கருவிகள் நான்கும் புருடனாகிய ஆன்மாவும் ஆக) இருபத்தைந்து கருவிகளும் சேர முப்பத்தைந்தும்; கண்டத்து வாக்காதி மெய்யாதி விட்டகன்று - (அந்த முப்பத்தைந்து கருவிகளில்) கழுத்தில் வாக்கு முதலியனவும் மெய் முதலியனவும் ஆன பத்தும் விட்டு நீங்கி; (உரை முதலிய அவற்றின் செயல்கள் பத்தோடு உயிர்க்காற்று

முதலிய பத்துக் காற்றுகளும் மனம் முதலிய அகக் கருவிகள் நான்கும் புருடனுகிய ஆன்மா ஒன்றும் ஆக) வேறு ஐயைந் தாம் - வேறு இருபத்தைந்து கருவிகளாகும்; இதயத்துச் சித்தம் சென்றணையும் -(அந்த இருபத்தைந்தில் இருபத்திரண்டு கருவிகள் நீங்கி) (உயிர்க்காற்று ஒன்று புருடன் ஒன்று) சித்தம் ஒன்ருக மூன்று கருவிகள் இதயத்தில் சென்று பொருந்தும்; நாபியினில் உயிர் அணையும் - கொப்பூழில் புருடனேடு உயிர்க் காற்றும் ஆக இரண்டு சென்று சேரும்; அணையா மூலத்து - வேறு கருவிகள் எதுவும் சேராத மூலத்தில்; ஒன்று - புருட னுகிய ஆன்மா ஒன்று மட்டும் பொருந்தும்.

இச் செய்யுளை, 'நன்னுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்தாம், கண்டத்து வாக்காதி மெய்யாதி விட்டகன்று வேறு ஐயைந்தாம், இதயத்துச் சித்தம் சென்றணையும், நாபியினில் உயிர் அணையும், அணையா மூலத்து ஒன்று' என்று உரைநடைப்படுத்திக் கொண்டால் பொருள் செய்தல் எளி தாகும்.

நனவுநிலை (சாக்கிரம்) புருவ நடுவில் நிகழ்வதாகும். கழுத்தில் (சொப்பனம்) கனவு நிகழும். இதயத்தில் உறக்கம் (சுழுனை) நிகழும். கொப்பூழில் பேருறக்கம் (துரியம்) நிகழும். மூலத்தில் உயிர்ப்படக்கம் (துரியாதீதம்) நிகழும்.

நெற்றியிலிருந்து இவ்வாறு கீழே இறங்கி மூலத்தில் தங்கும்போது புருடனுகிய ஆன்மா மட்டும் கிடக்கும். கருவிகளை அங்கங்கும் விட்டுக் கீழிறங்கும் ஐந்து நிலைகளும் 'கீழாலவத் தைகள்' எனப்படும். இந்த அவத்தைகள் ஐந்தையும் உயிர் கட்டாயமாக அன்ருடம் பொருந்தும் என்று சொல்லுவதற் கில்லை. உறக்க நிலை (இதயம்) வரையிற் சென்று, மீண்டும் கனவு நனவு நிலைகளுக்கு வந்து விடுதலும் உண்டு.

உயிர்ப்படக்க நிலையாகிய மூலாதாரத்திலிருந்து மேல் எழும்பொழுது முறையே உயிர் கொப்பூழுக்கு வந்து, உயிர்க் காற்ருேடு சேர்ந்துகொள்ளும்; இதயத்துக்கு வந்து சித்தத் தோடும் சேர்ந்து 'புருடன்' 'உயிர்வளி' 'சித்தம்' என்னும் மூன்றும் ஆகும்; கழுத்து என்னும் கனவு நிலைக்கு வந்து அம் மூன்ருேடு இருபத்திரண்டும் சேர்ந்து இருபத்தைந்தாய் நிற்கும். புருவநடு என்னும் நனவு நிலைக்கு வந்து அவ் விருபத்தைந்தோடு மெய் முதலிய அறிகருவிகளும் வாக்கு முதலிய செயற் கருவிகளுமாகிய பத்தும் சேர்ந்து முப்பத்தைந் தாய் இருக்கும்.

முறையே இவ்வாறு உயிர்ப்படக்க நிலையிலிருந்து நனவு நிலைக்கு எழுந்து வரும்போது பற்பல கருவிகளுடன் அங்கங்கும் சேர்ந்து விழிப்பு நிலைபெறும். இப்படி மேல் வருதலை 'மேலாலவத்தை' என்ப.

விழிப்பு நிலையில், புருவ நடுவில் முப்பத்தைந்து கருவிகளோடு கூடி உயிர் 'தூல உடம்புடன்' இருக்கும். கழுத்தில், மனம் புத்தி அகங்காரம் மூன்றும், தன்மாத்திரைகள் ஐந்தும் கூடிய 'சூக்கும உடம்பு' பொருந்தி இருபத்தைந்து கருவிகளோடு கனவு காணும். இதயத்தில் புருடனென்றும் ஆன்மா, உயிர் வளியோடு அகக் கருவிகளின் சித்தமும் கூடி சிந்தித்தபடி நிற்கும். அதனாலேதான் அந் நிலையைப் பெற்ற உயிர், அந்த உறக்க நிலையிலிருந்து எழுந்து விழிப்புக்கு வந்தவுடன் 'நன்றாய் உறங்கினேன்' என்று சொல்லுவதற்கும் வாய்ப்பாயிற்று. புருடன் என்னும் உயிர், உயிர்க் காற்றோடு மட்டும் சேர்ந்து துரிய நிலையிற் பேருறக்கத்திற் கிடந்து, பின்பு உயிர் மட்டும் மூலாதார நிலையில் உயிர்ப்பும் அடங்கிக் கிடக்கும்.

உயிர் இவ்வாறு நெற்றி நடுவிலிருந்து கீழிறங்கி வருகின்ற கீழாலவத்தை என்னும் ஐந்து நிலைகளும் இருள் நிலையாகும். கருவிகளோடு கூடி விழிப்புநிலைக்கு வரும் மேலாலவத்தை என்பது, ஓர் அளவு ஒளிநிலையாகும்.

சித்தியார் முறையே இவ் விருவகை நிலைகளையும் 'ஒடுங்கு முறை' என்றும், 'தோன்று முறை' என்றும் கொண்டது; 'இருள் நிலை' 'ஒளியின் தொடக்க நிலை' 'பிறவி பெறுவது,' 'பிறப்பறுப்பது' இவை இரண்டும் அன்றாடம் பொது மக்களுக்கு நிகழும் பொது இயல்பு. மேலாலவத்தையைப் பிறப்பறுப்பதென்றது, தொடக்கத்தில் உயிர்கள் கருவிகளோடு சேர்ந்து ஓரளவு ஒளிநிலையைக் கூடுதலால் என்று கொள்ளப்படும்; இம் மேலாலவத்தை திருவைந்தெழுத்தில் 'சிம் முதலா ஓது' என்பதைப் போன்றது!

மூன்றாவது வகை, நெற்றி நடுவிலேயே ஐந்தவத்தை பெறுகின்ற 'மத்தியாலவத்தை' நிலைகள்; இவை, 'யோக' நிலைகளாகும். இது நெற்றி நடுவிலிருந்து கருவிகளோடு கூடிய தாய்த் தலையின் உச்சி வரையிற் செல்லும். இந் நிலைக்குள் நிகழும் ஐந்தவத்தைகள் நனவில் நனவு, நனவில் கனவு, நனவில் உறக்கம், நனவில் பேருறக்கம், நனவில் உயிர்ப்படக்கம் எனப்படும்.

விழிப்பு நிலையிலேயே (சகல நிலை) இவை நிகழ்தலாலும், கருவிகளில்லாத உச்சிக்கு மேல்நிலையில் சுத்த அவத்தைகள் ஐந்தும் நிகழ்தலாலும், நெற்றி நடுவிலேயே நிகழ்வனவாகிய இவை 'மத்தியாலவத்தை' எனப்பட்டன.

கீழாலவத்தையிற் செல்வது ஆணவ இருளில் ஒடுங்குவது; மேலாலவத்தையில் வருவது ஒளிநிலையின் தொடக்க நிலை; மத்தியாலவத்தையில் தோன்றுவது யோகநிலையாகிய கருவிகளின் பேரொளி நிலைகள்; அதனால் இது சிறப்புச் 'சகல நிலை' எனப்படும். மூலத்திலிருந்து வரும் மேலாலவத்தையும் சகல நிலையேயாயினும், அது தொடக்கப் பொதுநிலை.

இம் மூன்று நிலைகளையும் சிவஞான சித்தியார்,

"இருவகைச் சாக்கிராதி அவத்தைகளியல்பு தானும்,
ஒருவகை கீழே நோக்கி உற்பவங் காட்டும்; ஒன்று
பெருகமேல் நோக்கித் தீய பிறப்பறுத் திடும்; யோகில்
தருவதோர் சமாதி தானும் தாழ்ந்துபின் சனனஞ் சாரும்"

என்று கூறும். இதில் "யோகில் தருவதோர் சமாதி தானும்" என்பது மூன்றாவது யோக அவத்தையைக் குறிக்கும்.

'சுத்தாவத்தைகள்' இம் மூன்றினும் வேறு; உச்சிக்கு மேல் 'நிராதார'மாய் ஞானத்தில் நிகழும ஐந்து அவத்தைகள் அவை. எனினும், இவற்றிற்கும் தனிப்பிடம் நெற்றி நடுவே; உணர்வு சிறப்பாக உச்சிக்குமேல் நிகழும்; இதன் பேரொளி இதழத்திலிருந்து 'துவாதசாந்தப் பேரிடம்' வரையில் வட்டமிட்டுக்கொண்டு அதற்குமேல் விளங்கும் அம்மையப்பர் திருவடியை வருடிக்கொண்டிருக்கும்.

இந்த அவத்தைகளெல்லாம் 'கேவல அவத்தை' எனவும், 'சகல அவத்தை' எனவும், 'சுத்த அவத்தை' எனவும் பெயர் பெறும்.

'கேவல'மாவது, ஆணவத்தோடு ஒன்றுகின்ற இருள் நிலை; மூலாதாரத்தில் 'புருடதத்துவ உயிர்' தான் மட்டும் உளதாகும் நிலை; மிக அழுத்தமானது. 'சகல'மாவது, கருவிகளோடு கூடி ஓரளவு அறிவு விளங்கும் பொதுவான ஒளிநிலை. இதில் சிறப்பான ஒளிநிலையாகிய 'மத்தியாலவத்தையும்' அடங்கும். அதனாலேதான் இரண்டையும் சேர்த்து ஒரே செய்யுளில் சிவஞானசித்தியார் கூறியது.

'சுத்தநிலை'யாவது, உயிரின் அறிவு உணர்வுகள் முற்றும் தூயவாகியும் விளங்கியும், சிவத்தோடு கூடிப் பிறவியை அடியோடு நீக்கிப் பேரொளியில் பிறங்குவது.

இவற்றைச் சிவஞானசித்தியார் தனியாக ஒரு செய்யுளில்,

"கேவல சகல சுத்தம் என்றுமூன் றவத்தை யான்மா
மேவுவன் கேவ லம்தன் உண்மை;மெய் பொறிக ளெல்லாம்
காவலன் கொடுத்த போது சகலனும்; மலங்க ளெல்லாம்
ஓவின போது சுத்தம் உடையன்உற் பவம்து டைத்தே"

என்று தொகுத்துக் கூறும். அடுத்த மூன்று செய்யுட்களில் முறையே இம் மூன்றின் விளக்கங்களும் வரும். அவற்றிற் சுத்த நிலைக்குக் கூறும் செய்யுள்,

"இருவினைச் செயல்க ளொப்பின் ஈசன்தன் சத்தி தோயக்
குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து, ஞானம்
பெருகினா யகன்தன் பாதம் பெறுவது சுத்த மாமே"

என்பது.

ஞானநிலை, கருவிகள் கடந்த நிலை; யோகநிலை கருவிகளோடு கூடிய நிலை; ஞானநிலை 'சுத்த நிலை' என்று சொல்லப் படும். இனி, மேலாலவத்தையும், மத்தியாலவத்தையும், சுத்தாலவத்தையும் சேர்ந்தே எல்லாம் மேல்நிலை உறுதலால் மேலாலவத்தை என்னும் பெயராலேயே சொல்லுவதும் உண்டு. ஆனால், வகுத்து அவத்தை வேறுபாடுகளை அறிநது கொள்வது மேலானது.

மத்தியாலவத்தைக்கு ஓர் எடுத்துக்காட்டுச் செய்யுள், சிவ ஞானபோதத்தில் வருகிறது.

"இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்,
இலாடத்தே ஐந்தவத்தை யெய்தும்;—இலாடத்தே
அவ்வவ் இந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
அவ்வவற்றின் நீங்கல்அது ஆங்கு."

இதன் பொருள்:

இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்—நெற்றி நடுவில் மேலாலவத்தையால் முப்பத்தைந்து கருவிகளோடு கூடி விழிப்புநிலையை அடைந்த உயிர், இலாடத்தே ஐந்தவத்தை யெய்தும்—அவ் விழிப்புநிலையாகிய புருவ நடுவிலேயே 'நனவில் நனவு' 'நனவில் கனவு' முதலிய ஐந்து நிலைகளை யோக முறையில் அடையும்; இலாடத்தே அவ்வவ் இந்திரியத்து அத் துறைகள் கண்டு—நனவிற் புருவ நடுவி

லேயே ஐந்து நிலைகளையும் இயக்குகின்ற அந்த அந்தக் கருவிகளை அதனதன் நிலைகளில் கண்டு நுகர்ந்து; அதுவாங்கு—சுத்தாவத்தைகள் ஐந்தையும் போல; அதுவே அவ்வவற்றின் நீங்கல்—அவ்வப்பொழுதே அவ்வந்நிலைகளிலிருந்து நீங்கி மேற்சேறல் சிறப்பு !

'மன்ற' என்னும் இடைச்சொல் தேற்றப்பொருள் தருதலால் பெரிதும் என உரைக்கப்பட்டது.

இங்கே கருவிகள் என்றவை, இது 'யோகாவத்தை'யாதலால் 'சுத்த மாயை'யின் கருவிகளாகும். அதைக் கொண்டே, இந்த யோக அவத்தைகளை, ஞான அவத்தைகளாகிய சுத்த அவத்தை என்று சொல்லிவிடக்கூடாது. யோகம் வேறு, ஞானம் வேறு; முன்னது கருவிநிலை, பின்னது கருவியல்லா நிலை; அதனாலேதான் உடம்பின் உச்சிக்கு மேல் சுத்தாவத்தைகளைக் கூறுவது சிறப்பாயிற்று. சில கருவிகள் என்பவை, சுத்த மாயையின் கருவிகளே; அவைதாமும் கருவிகளே யாகுமாதலால் யோக அவத்தைகளை அவை செலுத்தின. யோக அவத்தைகளுள் நனவில் நனவைச் சுத்தமாயைக் கருவிகளாகிய சுத்தவித்தை முதல் நாதம் வரையில் ஐந்து கருவிகளும் இயக்கும். நனவிற் கனவில், ஈசுவரம் முதல் நாதம் வரையில் நான்கு கருவிகளும், நனவில் உறக்கத்தில் சாதாக்கியம் முதல் நாதம் வரையில் மூன்று கருவிகளும், நனவிற் பேருறக்கத்தில் விந்து நாதம் இரண்டும், நனவில் உயிர்ப் பக்கத்தில் நாதம் என்னும் 'சிவதத்துவம்' ஒன்றும் நிகழ்விக்கும். இக் கருவிகளில் அவ்வப்போது படிந்தும் கடந்தும் யோகிகள் விரைந்து மேலேறுவர். இவ் வுண்மையையே ஆசிரியர் தமது செய்யுளில் 'அவ்வவற்றின் நீங்கல்' என்றார். சுத்தாவத்தை நிகழும்போது இன்னும் இவை விரைவு பெறும். சுத்தாவத்தைகளைச் சுத்தநிலை என்று சொல்லுவதே சிறப்பு. உயிர்க்குச் சுத்த நிலைகளே முதன்மை ஆனமையால் அவத்தைகள் என்னும் பெயரில் 'சுத்த நிலை'களும் கூறப்பட்டன. மற்றப்படி கருவிகளோடு கூடிய 'யோக நிலை' வரையிலேதான் அவத்தைகள் என்பது சிறப்பு.

சுத்த நிலைகளிலும் ஐந்து நிலைகள் உண்டு. அவை சிவஞானபோதத்தின் மறு பாதியாகிய உண்மைப் பகுதியில் சிறப்பாக வரும்.

ஆணவ இருளில் போகும்போதும் திரும்ப மாயை ஒளியில் வரும்போதும் கருவிகள் குறைவதும் நிறைவதுமாய் இருக்கும்; அக் கருவிகளின் செயல்கள் கீழாலவத்தையிலும் மேலா

லவத்தையிலும் நிகழ்வது இயல்பு; ஆதலால், கீழிறங்கும் போதும் விழிப்புநிலைக்கு வரும்போதும் 'கனவு' முதலியன நிகழக்கூடும். இந் நிலைகளிலெல்லாம் வினைகளின் புசிப்பு நிகழும். ஆகவே கனவு முதலியவற்றிலும் வினை நுகர்ச்சிகள் உண்டு. தக்கவர்களுக்கு வினைப் புசிப்புகள் பெரும்பாலும் கனவிலேயே நிகழ்ந்துவிடும். நனவில் நிகழ்வதானால் மெத்தென நிகழும். பொதுமக்களுக்கானால் நனவிலேயே பெருக நிகழ்ந்து துன்பம் செய்யும்.

யோகாவத்தையாகிய மத்தியாலவத்தையில், அஃதாவது 'நனவில் நனவு' 'நனவில் கனவு' முதலியவற்றில், ஊழை உப்பக்கம் காணுதல் சிலர்க்கு நேரும். மற்றுஞ் சிலர்க்கு, ஊழ் ஒரு சிறிது தாக்குதல் செய்யும். இவ் விரண்டும் கருவிகளின் மூலம் நிகழுமாதலால் யோகாவத்தைகளில் இவற்றைக் கண்டு செல்லும் யோகிகள் உண்டு. அதனால் அவ்வக் கருவிகளிலிருந்து அவ்வப்பொழுதே அவர்கள் நீங்கி உயர்வர்.

மேலே சென்றவர் மீண்டும் அந்த யோக அவத்தையின் தொடக்க நிலைக்கு வருதலும் உண்டு. ஞானிகளுக்கு இந்த நிலை இல்லை. ஆதலால், 'மலங்களெல்லாம் ஓவினபோது சுத்த முடையவன் உற்பவம் துடைத்து' என்று சுத்த நிலையினரைச் சிவஞான சித்தியார் விளக்கியது.

இங்ஙனமெல்லாம் ஆணவமலம் தேய்வதற்காக, உயிர்கள் கேவல சகல சுத்தமென ஐந்தவத்தைகளை அடைதல் இயல்பு; இவை அவற்றின் இலக்கணம்.

சிவஞான போதத்தின் ஐந்தாம் நூற்பா பின்வருமாறு வருகின்றது :

> "விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
> அளந்தறிந் தறியா; ஆங்கவை போலத்,
> தாம்தம் உணர்வின் தமிஅருள்;
> காந்தம் கண்ட பசாசத் தவையே."

முன் நூற்பாவிற் சொல்லப்பட்ட ஆன்மாவினால் என்பதற்கு, 'விளம்பிய உள்ளத்து' என்று வந்தது. மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஐம்பொறிகளையும் உணர்த்த வேண்டிய இடத்தில், 'செவி' என்பது கூறப்படவில்லை. மற்றப் பொறிகளோடு இனமான அதனை, உரை செய்வோர் தாமே சேர்த்துக் கொள்ளக்கூடும் என்று ஆசிரியர் அதனை விட்டுவிட்டார். தானே பெறப்படுமாதலால், 'செவி' என்னும் அது 'சொல்

'லெச்சம்' எனப்படும். பொறிகள் ஐந்தும் தத்தம் புலன்களை அளந்து அறிந்தும், தம்மையும் தமக்கு அறிவு கூட்டும் உயிரையும் அறியமாட்டா என்பதற்கு, 'அளந்து அறிந்தும், அறியா' என்றார். ஒவ்வொரு பொறியும் தமக்குரிய புலனை ஓர் அளவாகவே அறியும், முழுதும் அறிய இயலாது. கண் தனக்கு எட்டும் எல்லைப் பரப்பு முழுமையும், உயிர் விரும்பினாலன்றிப் பார்ப்பதில்லை. உயிர் எதனைப் பார்க்கும்படி செலுத்துகிறதோ அதனை மட்டும் கண் அளந்து பார்த்துக்கொள்ளும். அதனால் பொறிகள், அளந்து அறிதலைப்பற்றி இங்கே ஆசிரியர் நினைவூட்டினார்.

உயிர் அறிவிக்கும் அளவிலேயே பொறி புலன் கரணமெல்லாம் அளந்து அறிய வேண்டியிருப்பதனால், அவையெல்லாம், உயிரின் உதவி கொண்டே அளந்து அறிகின்றன என்று கொள்ளும்படி இருக்கிறது.

பொறிகள் மட்டும் இங்கே சொல்லப்பட்டாலும் ஏனைக் கருவிகளுக்கும் இவ்வியல்பு பொருந்தும்.

"பொறிபுலன் கரணமெல்லாம் புருடனால் அறிந்து"

என்பார் அருணந்தி சிவனார்.

விளக்கொளி அறிவற்றதாயினும், அறிவு உள்ள உயிருக்கு அது பொருள்களை அளவிட்டுக் காட்டுகிறது. அதைப்போலத் தான், பொறிகள் முதலிய கருவிகள் அறியாப்பொருளாய் இருந்தும், அறிவுள்ள உயிருக்கு அவை விளக்கம் காட்டுகின்றன. ஆனால், அவ்வாறு காட்டியும் அக் கருவிகள், தம்மையும் அறிவதில்லை; தமக்கு அறிவு உதவும் உயிரையும் அறியமாட்டா. இது பழக்கத்திலும் நமக்குத் தெரிகிறது. பொறிகள் அறியாதிருக்கின்ற இந் நிலையைப் போலவே, உயிரும் தன் அறிவை உணர்விக்க உதவும் திருவருளையும் உயிர் அறிந்து கொள்ளாமல் இருக்கிறது; தன்னை அறிவதில்லை.

'அளந்தறிந்து அறியா' என்னுமிடத்தில் உம்மை சேர்த்து அளந்து அறிந்தும் அறியா என்று சொல்லிக் கொள்ள வேண்டும். அறியா என்னும் எதிர்மறைப் பொருளை அந்த உம்மை காட்டுவதனால், அதனை 'எதிர்மறை உம்மை' என்று இலக்கணப் பெரியோர் கூறுவர்.

கருவிகளின் இந் நிகழ்ச்சியை, உயிர் திருவருளை அறிந்து கொள்ளாத கருத்துக்கு, உவமையாகக் கூறுவதனால், 'ஆங்கு அவை போல' என்று ஆசிரியர் குறித்துக் கொண்டார்.

'அவத்தை'களிற் செல்லுதலால், கருவிகள் வாயிலாகத் தன் அறிவை உயிர், பெருக்கிக் கொள்ளும் என்று தெரிவதனுல், 'கருவிகளும் உயிருமே அறிவு விளக்கத்துக்குப் போதுமே, முதல்வன் தேவையில்லையே' என்று தோன்றும்; 'அந் நிலையிலும் முதல்வன் உதவி இன்றியமையாதது' என்று விளக்குவதற்காகவே இந் நூற்பா எழுந்தது. கருவிகளைப் பற்றியும் இதிற் பேச நேர்வதனுல், கருவிகளின் இயல்புகளும் சொல்ல நேர்ந்தது; இதனுல் மலங்களின் இலக்கணம் தெரிகிறது.

இப்போது நூற்பாவின் உரையினைக் காண்போம்.

'விளம்பிய உள்ளத்து—மேல் நூற்பாவிற் சொல்லப்பட்ட ஆன்மாவினுல்; மெய் வாய் கண் மூக்கு செவி—மெய் வாய் கண் மூக்கு என்னும் ஐம்பொறிகள் முதலிய கருவிகள்; அளந்தறிந்து—உயிரறிவின் உதவியினுல் தாம் அறிவு பெற்றுப் பொருள்களை அளந்து அறிவதாயிருந்தும், அறியா—தம்மை அறிவதில்லை, அந்த உயிரின் உதவியையும் அறியமாட்டாமல் இருக்கின்றன; ஆங்கு அவை போல—அப்படி வருகின்ற அக் கருவிகளைப் போலவே; தாம் தம்முணர்வின் தமி அருள்—உயிர்களும் தம்மை அறியாமையோடு தம் உணர்வுக்கு உதவியாய் இருக்கின்ற முதல்வனது திருவருளையும் அறியமாட்டாமல் இருக்கின்றன; காந்தம் கண்ட பசாசத்தவையே—ஆனுல் அவ்வுயிர்கள், காந்தத்தின் முன் காணப்பட்ட இரும்பைப் போல் இறைவனுல் உணர்த்தப்பட்டு ஈர்க்கப்படுகின்றன.

காந்தத்தின் முன்னிலையில் இரும்பு தானே இழுப்புண்டு போகிறது. காந்தத்தின் ஆற்றல் இரும்பை அவ்வாறு இயக்குகிறது. அதுபோல முதல்வனது ஆற்றலால் உயிரும் அவன் முன்னிலையில் அறிவிக்க அறிந்து இயங்குகிறது; உயிரின் கருவிகளும் இயங்குகின்றன. அப்படியிருந்தும், காந்தம்போல் இறைவன் நிலைதிரிவதில்லை.

உணர்வின் என்ற இடத்தில் நான்கன் உருபு விரித்துக் கொள்க. 'தமி' என்ற சொல்லால் முதல்வன் குறிக்கப்பட்டமை எதற்கு? 'தமி' என்பதற்குத் 'தனியன்' என்பது பொருள். 'தனக்கு மேல் முதல்வன் இல்லாதவன், தானே முதல்வன்' என்பது கருத்து. 'கருவிகளுக்கு முதலாயிருப்பது உயிர், உயிருக்கு முதலாயிருப்பது இறைவன்' என்பது போல அம் முதல்வனுக்கும் முதல் வேறு உண்டோ என்று இங்ஙனம் தொடர்ந்து செல்லாதபடி எல்லை வரையறுத்துக் கொள்வதற்காகத் 'தமி' என்ருர். (தொடரும்)

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

**[ஞா. தேவநேயன்]**

4. அரத்தம்

நிறப் பெயர்கள் பொதுவாகப் பொருள் பண்பு வினை என்னும் மூவடிப்படையில் தோன்றியுள்ளன. அவற்றுள் முதலதே பெரும்பான்மை.

எ-டு. ash, gold, lead, olive, orange, slate, snuff.

அரத்தம், களிப்பாக்கு, சாம்பல், பவழம், பால், பொன், மயில்.

நெருப்பு, எரியும் பொதுநிலையிற் சிவப்பாகவும், ஒளிரும் சுடர்நிலையில் வெள்ளையாகவும், தோன்றுவதால், நெருப்புக் கருத்தினின்று செம்மைக் கருத்தும் வெண்மைக் கருத்தும் தோன்றியுள்ளன. கதிரவன், இளவெயில் வீசும் விடிகாலையிற் பவளம்போற் சிவந்தும், முதிர்வெயிலெறிக்கும் நண்பகலில் வெள்ளிபோல் வெளுத்தும், தோன்றுதல் காண்க.

அழல்வண்ணன் என்பது சிவனையும், எரிமலர் என்பது செந்தாமரை மலரையும் முண்முருங்கை மலரையும், செந்நிறம் பற்றிக் குறிக்கின்றன. இந்நிறக் கருத்து நெருப்புக் கருத்தினின்றே தோன்றுவதால், அழல், எரி என்னும் பெயர்களின் மூலச் சொற்களும் இக் கருத்தைத் தெரிவிக்கின்றன.

உல்—உல—உலவை=காய்ந்த மரக்கிளை.

''இலைதீந்த வுலவையால்'' (கலித். 11)

உல்—உலர். உலர்தல்=1. காய்தல். 2. வாடுதல். "உலர்ந்து போனே னுடையானே'' (திருவாச. 32: 1), ம. உலர். உலர்ச்சி—ம. உலர்ச்ச.

உலத்தல்=அழிதல், சாதல், முடிவு பெறுதல், கழிதல், நீங்குதல்.

உல்—உலை=1. கொல்லன் எரிக்கும் அடுப்பு. ''கொல்ல னுலையூதுந் தீயே போல்'' (நாலடி. 298). 2. உணவு சமைக்கும் பொருட்டுக் கொதிக்க வைக்கும் நீர். ''உலைப்பெய் தடுவது போலுந் துயர்'' (நாலடி. 114).

உல்—உர்—உரி=நெருப்பு. க. உரி.

உர்—உரு. உருத்தல் (செ. கு. வி.)=1. எரிதல், அழலுதல். "ஆக முருப்ப நூறி" (புறநா. 23 : 10). 2. வெகுளுதல், பெருஞ்சினங் கொள்ளுதல். "ஒருபக லெல்லா முருத்தெழுந்து" (கலித். 39 : 23)—(செ. குன்றுவி.) வெகுளுதல். "ஒள்வாட் டானை யுருத்தெழுந் தன்று" (பு. வெ. 3 : 2).

சினத்தல் எரிதல் போன்றது.

உரு—உருத்திரம்=சினம். உருத்திரம்—வ. ருத்ர (rudra). *OE. wreth, OS wrēth, OHG. reid, ON. reithr, E. wrath, wroth.*

உருத்திரம்—உருத்திரன்=கடுஞ்சினத்தன்.

உருத்திரன்—வ. ருத்ர (rudra).

தமிழரின் முத்தொழிலோனான சிவன் ஆரியரின் முத்திருமேனியருள் (திரிமூர்த்திகளுள்) ஒருவனான அழிப்புத் தொழிலோனாக்கப்பட்டபின், ஆரியக் கடுங்காற்றுத் தெய்வ (storm god) மாகிய ருத்ர (உருத்திரன்) அழிப்புத் தொழிலொப்புமை பற்றிச் சிவனோடு இணைக்கப்பட்டான். ருத்ர ஆரியத் தெய்வமாயினும், வடமொழி தமிழின் திரிமொழி யாதலின், தமிழ்த்திரி சொல்லாலேயே குறிக்கப்பட்டான் என அறிக.

உரு—உரும்—உருமி—உருமித்தல்=வெப்பமாதல்.

உரும்—உருமம்=1. வெப்பம். (பிங்.) 2. உருமிக்கும் நண்பகல். "உருமத்திற் கதிரே" (சேதுபு. இராமனருச். 218).

உருமவிடுதி (யாழ்ப்.)=நண்பகல் வேலை நிறுத்தம்.

உருமகாலம்=கோடைக்காலம்.

உருமத்துக்குவிடுதல்=நண்பகலில் வேலை நிறுத்துதல். உரும்—உரும்பு=கொதிப்பு. "உரும்பில் கூற்றத்தன்ன நின்" (பதிற்றுப். 26 : 13).

உரும்பு—உருப்பு=1. வெப்பம். "கன்மிசை யுருப்பிறக் கனைதுளி சிதறென" (கலித். 16 : 7). 2. சினத்தீ. "உருப்பற நிரப்பினை யாதலின்" (பதிற்றுப். 50 16). 3. கொடுமை. "உருப்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகி" (பெரும்பாண். 417).

உருப்பு—உருப்பம்=1. வெப்பம். "கனலும்.....வந்து குடிகொண் டவணுறைந்தன வுருப்பமெழ" (அரிச். பு. விவா. 104). 2. சினம். (W.).

உரும்பு—உரும்பரம்=1. செம்பு. 2. பெருங்காயம்.

உரும்பரம்—வ. உதும்பர=செம்பு.

உரு—உருகு. உருகுதல்=1. வெப்பத்தால் இளகுதல். 2. மனநெகிழ்தல். "பூண்முலையார் மனமுருக" (பு. வெ. 9 : 11, கொளு). 3. மெலிதல். தாயிறந்தபின் உருகிப் போனாள். ம. உருகு.

உருக—உருக்கு. உருக்குதல்=1. மாழையிளகச் செய்தல். "தீயிடை யுருக்குதல் முயன்றான்" (கந்தபு. மார்க்க. 131). 2. மனநெகிழச் செய்தல். "எம்பிரா னுமஞ்சொல்லி யுருக்கினன்" (கம்பரா. உருக்காட். 27). 3. மெலியச் செய்தல். அவனை நோய் உருக்கி விட்டது. 4. அழித்தல். 5. வருத்துதல். ம. உருக்கு.

உருக்கு=1. எஃகு. (சூடா.). 2. உருக்கின பொருள். "செப்புருக் கனைய" (கம்பரா. கார்க்கா. 91).

ம. உருக்கு, க. உர்க்கு, தெ. உக்கு.

உருக்கு — உருக்கம் = 1. மனநெகிழ்ச்சி, இளக்கம். 2. இரக்கம். "உருக்கமி லவ்வசுரக் குலம்" (இரகு. மாலையி. 113). 3. தெய்வப் பத்தி. "உருக்கத்திற் கரத்தேந்தி" (விநாயகபு. 75 : 121) ம. உருக்கம்.

உருக்கு — உருக்கன் = மேனியை வாட்டும் நோய். (யாழ்ப்.).

உல்—உள்—ஒள்=1. ஒளியுள்ள. 2. அழகான. 3. நல்ல. 4. அறிவுள்ள.

ஒண்மை=1. விளக்கம். "ஒப்பின் மாநக ரொண்மை" (சீவக. 535). 2. இயற்கை யழகு. "ஒண்மையு நிறையு மோங்கிய வொளியும்" (பெருங். உஞ்சைக். 31 : 151). 3. நன்மை. (பிங்.). 4. நல்லறிவு. "ஒண்மை யுடையம் யாம்" (குறள். 844). 5. மிகுதி. (திவா.). 6. ஒழுங்கு. (சூடா.).

ஒள்—ஒள்ளியன்=1. அறிவுடையோன். "ஒளியார் முன் ஒள்ளிய ராதல்" (குறள். 714). 2. நல்லவன். "நடக்கையில் ஒள்ளிய னல்லான்மேல் வைத்தல்" (பழ. 255). க. ஒள்ளித.

ஒள் — ஒளி = 1. நெருப்பு. 2. எரிக்குந் தன்மை 3. விளக்கு. 4. காந்தி. 5. கதிரவன். 6. வெயில். 7. திங்கள். 8 நாண்மீன். 9. மின்னல். 10. கட்புலன். 11. கண்மணி. 12. பெருமை. 13. புகழ். 14. அரசனது கடவுட்டன்மை. 15. அறிவு. 16. நன்மை. 17. செயற்கை யழகு.

ம. ஒளி. க. ஒள.

ஒளி — ஒளிர். ஒளிர் தல் = விளங்குதல். "உள்ளத்து ளொளிர்கின்ற வொளியே" (திருவாச. 37 : 5).

உள்—உண்—உண்ணம்=நெருப்பு, வெப்பம். "உண்ண வண்ணத் தொளிர் நஞ்ச முண்டு" (தேவா. 510 : 6).

உண்ணம்—வ. உஷ்ண. மரா. ஊன்பாணி=வெந்நீர்.

உண்—உண. உணத்தல்=காய்தல், புலர்தல்.

உண—உணத்து (பி. வி.). உணத்துதல்=1. காய வைத்தல். நெல்லை யுணத்தினுள். 2. ஈரம் புலர்த்துதல், தலையை யுணத்து. 3. வற்றலாக்குதல், வற்றுவித்தல். "மெய் யுணத்தலும்" (தைலவ. தைல. 140).

உண—உணங்கு. உணங்குதல்=1. உலர்தல். "தினை விளைத்தார் முற்றந் தினையுணங்கும்" (தமிழ்நா. 154). 2. மெலி தல். "ஊடலுணங்க விடுவாரோடு" (குறள். 1310). 3. மனம் வாடுதல். "உணங்கிய சிந்தையீர்" (கந்தபு. மோன. 21). 4. சுருங்குதல். "உணங்கரும் புகழ்" (காஞ்சிப்பு. நாட்டுப். 1). 5. செயலறுதல். "உணங்கிடுங் கரண மென்னில்" (சி. சி. 4 : 7).

க. ஒணகு.

உணங்கு—உணக்கு (பி. வி.) உணக்குதல்=1. உலர்த் துதல். "தொடிப் புழுதி கஃசா வுணக்கின்" (குறள். 1037). 2. கெடுதல். "உணக்கினுன்......என் வாழ்க்கை" (விநாயகபு. 80 : 120).

ம. உணக்கு.

உணங்கு—உணங்கல்=1. உலர்த்திய தவசம். "உணங் கல் கெடக்கழுதை யுதட்டாட்டங்கண் டென்பயன்" (திவ். திருவாய். 4 : 6 : 7). 2. வற்றல். "வெள்ளென் புணங்கலும்" (மணி. 16 : 67). 3. சமைத்த வுணவு. "ஓடுகை யேந்தி...... உணங்கல் கவர்வார்" (தேவா. 1030 : 3). 4. உலர்ந்த பூ. (பிங்.).

உணக்கு—உணக்கம்=வாட்டம். (W.).

ம. உணக்கம், க. ஒணகிலு (g), து. ஒணகெலு.

உள்—அள்—அழு—அழல்=1. நெருப்பு. 2. வெப்பம். 3. ஒளிவிளக்கம். 4. துளங்கொளி (கேட்டை). 5. செவ்வாய். 6. நரகம். 7. காந்தல், உடம்பெரிவு. 8. எருக்கு. 9. நஞ்சு. 10. உறைப்பு. 11. சினம்.

ம. அழல்.

அழல்தல்=1. எரிதல். 2. விளங்குதல், திகழ்தல். 3. காந்துதல். 4. உறைப்பாதல். 5. சினத்தல். 6. பொருமைப் படுதல்.

அழல் வண்ணன்=சிவன் (தேவா. 1055 : 5).

அழல்விதை=நேர்வாள வித்து. (மலை).

அழல் விரியன்=எரிவிரியன். (W.).

அழல் விழித்தல்=சினத்தல். (திருவாலவா. 14 : 5.)

அழலவன்=1. நெருப்புத் தேவன். 2. கதிரவன் 3. செவ்வாய்.

அழல்—அழலி=நெருப்பு. (பிங்.).

அழலி—அழலிக்கை=எரிச்சல்.

அழல்—அழலை=தொண்டை யெரிச்சல்.

அழலோன்=1. நெருப்புத்தேவன். 2. கதிரவன். 3. செவ் வாய்.

அழற்காய்=மிளகு.

அழற்குட்டம்=நளி (கார்த்திகை).

அழற்குத்துதல்=மணம் உறைத்தல்.

அழல்—அழற்சி=1. எரிவு. 2. கால்நடைச் சுரநோய். 3. உறைப்பு. 4. சினம். 5. அழுக்காறு.

அழல்—அழற்று (பி. வி.). அழற்றுதல்=1. எரியச் செய் தல். 2. வெம்மை செய்தல்.

அழற்று—அழற்றி—அழற்றியன் — அழத்தியன்=பெருங் காயம். (மூ. அ.).

அழல்—அழன்—அழனம்=1. தீ. (பிங்.). 2. வெம்மை. (பிங்.).

அழு—அகு—அகுட்டம்=எரியும் மிளகு. (W.).

ழு—க, போலித்திரிபு. ஒ. நோ: மழவு—மகவு, தொழுதி—தொகுதி, முழை—முகை.

அகு—அகை. அகைதல்=எரிதல். "அகையெரி யானுது" (கலித். 139 : 26).

அகு—அக்கு—அக்கி=1. நெருப்பு, தீ. "அக்கிவாய் மடுத்தவேடு" (திருவிளை. சமண. 38). 2. நெருப்புத்தேவன். "அக்கியுங் கரமிழந்து" (சிவதரு. சனன. 51). 3. சூட்டினு லுண்டாகுந்தோல் நோய் (herpes). ம., தெ. அக்கி.

பிரா. அக்கி (aggi).

அக்கு—இ. ஆக் (āg)=தீ.

அகி—அவி. ஒ. நோ: குழை—குகை—குவை.

வ—க திரிபின் தலைமாற்று க—வ.

அவிதல்=புழுங்குதல், வேதல், சமைதல், அழிதல், அணைதல், ஒடுங்குதல், ஓய்தல், பணிதல்.

அவி—அவிர். அவிர்தல்=விளங்குதல்.

அழு—அழுங்கு. அழுங்குதல்=வேதல், புழுங்குதல், வருந்துதல், பொறாமைப் படுதல்.

அழுங்கு—அழுக்கு—அழுக்குறு. அழுக்குறுதல்=பொறாமைப் படுதல்.

அழுக்குறு—அழுக்கறு—அழுக்காறு.

ஒ. நோ: நாசமுற்றுப் போவான்—நாசமற்றுப் போவான் (ஒரு வசைச்சொல்).

அழலி—அழனி—அகனி—வ. அக்நி.

(agni)—*L. ignis, Lith. ugnis, Russ. ogone, Slav. ognj.*

"From what root is Agni derived? He is the foremost leader, he is led foremost in sacrifices, he makes every thing, to which it inclines, a part of himself. 'He is a drying agent' says Sthaulāṣṭhīvi, 'it does not make wet, it does not moisten. 'It is derived from three verbs', says Śākapūṇi, 'from going from shining or burning, and from leading.' He, indeed, takes the letter *a* from the root *i* (to go), the letter *g* from the root *añj* (to shine), or *dah* (to burn) with the root *ni* (to lead) as the last member." என்று

லக்ஷ்மன் சருப் எழுதிய The Nighaṇṭu & the Nirukta என்னும் நூலில் 120ஆம் பக்கத்திற் கூறப்பட்டுள்ளது. அறிஞர் இதன் பொருத்தத்தைக் கண்டு கொள்க.

இனி, அக்நி என்னும் வடசொற்கு, *agra*, foremost என்பது மூலமென்றும், *ago*, to lead என்பது மூலமென்றும், *ag*, to go என்பது மூலமென்றும், உரைப்பர்.

அக்கினியைத் தேவருள் முந்தினவனென்று வேத ஆரியர் கொண்டாலும், அக்கினியென்னுஞ் சொல்லிற்கு அக்கிரம் என்னுஞ் சொல்லொடு தொடர்பில்லை. அக்கு (ak) = கூர்மை, நுனி. அக்கு—அக்கிரம் (Gk. acros) = நுனி, உச்சி. அக்கிரம் (Skt. agra) = நுனி, முதன்மை, தலைமை. அகை (ago) என்னும் சொல் உகை என்பதன் திரிபு. செல்லுதலைக் குறிக்கும் ag என்னும் சொல் பொருளளவில் ஒரு சிறிதும் பொருந்தாது.

உல்—அல்—அன்—அன்று. அன்றுதல் = சினத்தல்.

அன்—அனல் = 1. தீ. 2. வெப்பம். 3. இடி.

அனல்தல் = அழலுதல்.

அனல்—அனலம் = நெருப்பு. அனலம்—வ. அனல.

இது ப. க. த. அகர முதலியில் தலைகீழாகக் காட்டப் பட்டுள்ளது.

அனல்—அனலி = 1. நெருப்பு. 2. கதிரவன்.

அனல் = அனலன் = நெருப்புத் தேவன்.

அனல்—அனற்று (பி. வி.). அனற்றுதல் = (செ. கு. வி.) நோய்நிலையில் முனங்குதல். (செ. குன்றுவி.) 1. எரித்தல். 2. வெப்பமாக்குதல். 3. வயிறுளையச் செய்தல். 4. சினத்தல்.

அல்—அலத்து—அலத்தி = மின்மினி (சது.).

அலத்து—அலத்தம் = செம்பருத்தி. (மலை.).

அலத்தம்—வ. அலக்த.

அலத்தம்—அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு.

அலத்தகம்—வ. அலக்தக.

அலத்து—அலத்தல்—அலந்தல் = செங்கத்தரி.

அல்—அர்—அரம் = சிவப்பு. அரன் = சிவன்—வ. ஹர.

ஆரியர் சிவனை அழிப்புத் திருமேனியாக்கினதினால், ஹர என்னும் வடசொல்லிற்கு அழிப்பவன் என்று பொருள் கூறுவர்.

அர்—அரக்கு=1. சிவப்பு. (திவா.). 2. ஒரு செஞ்சரக்கு (சாதிலிங்கம்). 3. செம்மெழுகு.

ம. அரக்கு, க., து. அரகு (g). வ. ராக்ஷா. (செம்மெழுகு).

அரக்காம்பல்=செவ்வாம்பல். (பிங்.).

அரக்கு—அரக்கம்=1. அரத்தம். 2, அவலரக்கு.

அரக்கம் (அரத்தம்)—வ. ரக்த.

அரக்கம் (அவலரக்கு)—வ. ராக்ஷா.

அர்—அரத்து—அரத்தம்=1. சிவப்பு. அரத்தப் பூம்பட் டரைமிசையுடீஇ'' (சிலப். 14 : 86). 2. அரத்தம். 3. அரக்கு. 4. பவளம். 5. செம்பரத்தை. 6. செங்கழுநீர். 7. செம்பருத்தி. 8. செங்கடம்பு. 9. செந்துணி (துகில்). 10. செம்மெழுகு.

அரத்தம் (குருதி)—வ. ரக்த. ஒ. நோ: முத்தம்—வ. முக்த.

அலத்தகம் — அரத்தகம் = செம்பஞ்சுக்குழம்பு. (சீவக. 2459).

அரத்தம்—அரத்தன்=செவ்வாய்.

அலத்தி—அரத்தி=செவ்வல்லி. (சிந்தா. நி.).

அரத்தம்—அத்தம்=சிவப்பு. அத்தம்—அத்தி=செங்கனி மரம்.

அரத்து—அத்து—1. சிவப்பு. ''ஆய்ந்தளந் தியற்றிய வத்து ணுடையர்'' (சீவக. 1848). 2. துவர். ''ஆடுநீரன வத்து மண்களும்'' (சீவக. 2418).

உல் — இல் — இல—இலகு. இலகுதல்=விளங்குதல். ''வெண்ப லிலகுசுடர்இலகு விலகுமகர குண்டலத்தன்'' (திவ். திருவாய். 8;8:1). ம. இலகு.

இலகு—இலங்கு. இலங்குதல்=திகழ்தல். (பிங்.)

இலங்கு—இலக்கு. இலக்குதல்=சொலிப்பித்தல். ''எரியத் திரத் திலக்கியே'' (சைவச. பொது. 294).

இலக்கு—இலக்கம்=ஒளிவிளக்கம். ''எல்லே யிலக்கம்'' (தொல். இடை. 21). ஒ. நோ: L. luc, lux, Gk. luke.

இல்—இலக்கு=1. சிவந்த அரக்கு. 2. அரக்குக் குறி. 3. அடையாளம். அங்கே போக உனக்கு இலக்குச் சொல்கி றேன். 4. குறிப்பொருள். இலக்கு வைத்து எய்து பழக வேண்டும். 5. குறித்த இடம். அந்த இலக்கிலே உன்னைப்

பார்த்தேன். 6. நாடிய பொருள். இலக்கை நோக்கித் தொடருகிறேன். (விவிலி. பிலிப். 3:14). 7. வெல்ல வேண்டிய போட்டி அல்லது எதிரி. இவனே உனக்கு இலக்கு.

இலக்கு (அரக்கு)—E. lac. இலக்கு (குறி)—இ. லக் (lakh), வ. லக்ஷ்.

இலக்கு—இலக்கம்=1. குறி 2. எண்குறி. "குறியிலக்க மெழுதே" (தைலவ. பாயி. 15), 3. குறிப்பொருள். "இலக்க முடம்பிடும்பைக்கு" (குறள். 627). 4. நூறாயிரம். "இலக்கத் தொன்பதின்மர்" (கந்தபு. திருவவதார. 127).

இலக்கம்—வ. லக்ஷ.

இலக்கம்—இலங்கம்=குறி. இலங்கம்—வ. லிங்க. சிவ விலங்கம் (சிவலிங்கம்), மாவிலங்கம் (மாவிலிங்கம்) என்பன தமிழ்ச் சொற்களே.

இல்—இலத்து—இலத்தை—இலந்தை=செம்பழம், செம் பழ முட்செடி.

இலத்து—இலத்தி—இரத்தி=இலந்தை. "இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து" (புறநா. 34:12).

இல்—இர்—இராகி=சிவந்த கேழ்வரகு. ம., க., தெ., து. ராகி (g).

இல்—எல்=1. ஒளி. 'எல்லே யிலக்கம்" (தொல். இடை. 21). 2. கதிரவன். "எற்படக் கண்போல் மலர்ந்த" (திருமுரு. 74). 3. வெயில். (பிங்.). 4. பகல். "எல்லடிப் படுத்த கல்லாக் காட்சி" (புறநா. 170). 5. நாள். (பிங்.). 6. வெண்மை.

எல்—எல்லி=1. கதிரவன். (பிங்.). 2. பகல். "இரவொடெல்லியு மேத்துவார்" (தேவா. 344:8).

எல்—எல்லோன்=கதிரவன். (பிங்.)

எல்—எல்பு—என்பு=1. வெள்ளையான எலும்பு. "என்பி லதனை வெயில்போலக் காயுமே" (குறள். 77.). 2. எலும்போடு கூடிய உடம்பு. "என்பு முரியர் பிறர்க்கு" (குறள். 72).

ஒ. நோ : அல்+பு=அன்பு. அல்லுதல்=பொருந்துதல். நல்—(நல்பு)—நன்பு, வல்—(வல்பு)—வன்பு.

எல்பு—எலுபு—எலும்பு=வெள்ளையான உறுப்பு. ம. எலும்பு, க., து. எலு, தெ. எம்மு.

எல்பு—*L. albus*, white, *LL. alba*, white.

*E. alb,* white vestment reaching to feet, worn by priests. *OE., ME. albe.*

*E.* albata, white metal. *L.* albata, whitened.

*Port.* albino, white Negro.

*E.* albite, white or soda fieldspar.

*E.* album, book of white sheets for insertion of autographs, photographs, etc.

*E.* albumen, white of egg.

*E.* albuminuria, presence of albumen in the urine.

*E.* alburnum, recently formed white wood in exogamous trees.

எல்—எர்—எரி. எரிதல்=1. வேதல். 2. விளங்குதல், திகழ்தல். 3. காந்துதல். 4. எரிச்சலுண்டாதல். 5. சினத்தல். 6. வருந்துதல், பொருமை கொள்ளுதல்.

ம., து. எரி, தெ. எரியு, க. உரி. எரி=1. நெருப்பு. 2. நெருப்புத் தேவன். 3. நரகம். 4. விளக்கம். 5. கந்தகம்.

எரிச்சல்=1. வேகை. 2. அழற்சி. 3. காந்தல். 4. உறைப்பு. 5. சினம். 6. பொருமை. 7. சிவப்பு.

எரிமலர்=1. செந்தாமரை மலர். 2. முண்முருக்கம்பூ.

எர்—எரு=காய்ந்த சாணம்.

தெ. எருவு, க. எருபு (b).

எரு—எருக்கு=எரிக்கும் வேகமுள்ள செடி.

ம. எரிக்கு. வ. அர்க்க (arka).

தெ. எருப்பு=சிவப்பு. எருவை=1. அரத்தம். (திவா). 2. செம்பு. 'எருவை யுருக்கினு லன்ன குருதி'' (கம்பரா. கும்பக. 248). 3. செம்பருந்து. ''விசும்பா டெருவை பசுந்தடி தடுப்ப'' (64 : 4). 4. கழுகு. ''எருவை குருதி பிணங்க வருந்தோற்றம்'' (களவழி. 20).

எருவங்காடு—எரங்காடு=செங்களிமண் நிலம்.

அரத்தம் =சிவப்பு. அரத்த=சிவப்பான. அரத்த—ரத்த—Com. Teut. *OE.* *read* =*OF* ris. *rad,* *OS.* (*M. Du., MLG*) *rōd,* (*Du., LG. rood*), *OHG., MHG. rōt* (mod. *G. roth, rot*), *ON. raudr*, (*Sw., Da., rōd*), *Goth. rauths, E. red.*

*L. rūfus, OIr. ruad(h), Lith. raūda—s.*

*Gk. ereuthein,* to redden, *OE. reod, ON. rjodr,* red, ruddy, *L. ruber, Gk. eruthros OSI. rudru, Skt. rudhira,* red.

*L. rubeus,* red, *Fr.* rubis. *ME.* rubi, *E.* ruby = precious stone of colour varying from deep crimson or purple to pale rose.

*E.* rudd, freshwater fish, red-eye; *rud,* read.

*E.* ruddle, red ochre.

*E.* ruddy, healthily red. *OE. rudig* f. *rud,* red.

*E.* rufous, reddish brown. *L.* rufus.

வேதமொழி மேலையாரியத்தினின்று ருதிர (அரத்தம்) என்னும் சொல்லையும், தமிழினின்று நேரடியாக ரக்த என்னுஞ் சொல்லையும் பெற்றுள்ளது. இவை இரட்டையன்கள் (Doublets).

பிற்சேர்க்கை

அள்—அடு. ஒ. நோ : சுள்—சுடு, விள்—விடு.

அடுதல் = 1. சுடுதல், 2. காய்ச்சுதல், 3. உருக்குதல், 4. சமைத்தல், 5. கொல்லுதல், 6. அழித்தல், 7. வருந்துதல், 8. வெல்லுதல், 9. போர் செய்தல். ம. அடுக, க. அடு.

அடு—அடுப்பு = நெருப்பு எரிக்கும் முக்கல் அல்லது சுடு மண் கலம்.

அடு—அடுதல்—அடுசல்—அடுசில் — அடிசில் = சமைத்த உணவு.

சுடு—சுடலை = 1. சுடுதல். 2. சமைத்தல். 3. கொல்லுதல். 4. அழித்தல். 5. போர் செய்தல்.

அடல்—அடல்— = 1. எரித்த சாம்பல். 2. நீற்றின நீறு, சுண்ணம். 3. துன்பம். 4. போர்.

அடுகளம்—அடுக்களை = மடைப்பள்ளி. ம. அடுக்கள.

———

# கார்னிஷ் மொழி—ஓர் எச்சரிக்கை

[டாக்டர் ந. சஞ்சீவி]

கார்னிஷ் மொழி பற்றிக் கலைக்களஞ்சியம் தரும் விவரத்தை அண்மையில் (18-11-'77) சென்னையை நோக்கிப் புயல் வருகிறது என்ற அபாய அறிவிப்புகள் தரப்பட்டுக் கொண்டிருந்தபோது படித்தேன். 'காற்று–சூறுவளி' பற்றிப் படிக்கக் கலைக்களஞ்சியப் பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருந்தபோது கார்னிஷ் மொழி பற்றிய கலைக்களஞ்சியக் குறிப்பு என் கண்களில் பட்டது. அஃது ஓர் அபாய அறிவிப்பாகவும் எனக்குத் தோன்றியது. எனவே எல்லோர்க்கும் எடுத்துரைக்க எண்ணினேன். கலைக்களஞ்சியக் குறிப்பு வருமாறு :

கார்னிஷ் மொழி என்பது இங்கிலாந்து நாட்டில் கார்ன்வால் என்னும் பகுதியில் பேசப்பட்டு இப்போது வழக்கொழிந்திருப்பதாகும். இம் மொழி இந்தோ—ஐரோப்பிய மொழியினத்தில் கெல்டிக் (Celtic) பிரிவில் பிரித்தானியத் தொகுதியைச் சேர்ந்தது. இது வெல்ஷ் (Welsh) மொழியுடனும், பிரெட்டன் (Bretan) மொழியுடனும் நெருங்கிய தொடர்புடையது. கிறிஸ்தவ சமயச் சீர்திருத்தக் காலத்தில் வழிபாட்டு நூலும் வேதங்களும் ஆங்கிலத்தில் வெளியிடப்படலாயின. அது முதல் கார்னிஷ் மொழி மறையத் தொடங்கியது. இரு மொழிகளைக் கற்க நேர்ந்த கார்னிஷ் மக்கள் காலப் போக்கில் தாய்மொழியை மறந்தனர். இம் மொழி 19 ஆம் நூற்ருண்டு வரையில் ஓரளவிற்குப் பேச்சு வழக்கில் இருந்தது. அற்புத (Miracle) நாடகங்கள் சிலவும், 13 ஆம் நூற்ருண்டு இலக்கண நூலும், 1865 இல் வில்லியம்ஸ் இயற்றிய அகராதியும் கார்னிஷ் மொழியில் இன்று கிடைக்கும் நூல்களில் குறிப்பிடத்தக்கவை. அற்புத நாடகங்கள் 1350 முதல் 1500 வரை இயற்றப் பெற்றவை. இவையன்றி கார்னிஷ் கவிதைகள், பாட்டுக்கள், பழமொழிகள், கடிதங்கள், உரையாடல்கள், வேதமொழி பெயர்ப்புக்கள் போன்றவைகளின் சிறு பகுதிகளும் உள்ளன. 1904 இல் ஜென்னர் இவைகளையெல்லாம் தொகுத்து விளக்கி ஒரு சிறு நூல் வெளியிட்டுள்ளார். அண்மைக் காலத்தில் கார்னிஷ் மக்கள் தம்மொழிக்குப் புத்துயிர் அளிக்க முயன்று வருகின்றனர். சில பாக்களையும் சிறு கதைகளையும் வெளியிட்டுள்ளனர்.

———

# காவியப் புலவரின் சொல்லோவியம்

[மயிலை-சீனி வேங்கடசாமி]

அழகுக் கலைகளிலே மிகச் சிறந்தது இலக்கியக் கலை. இலக்கியக் கலை செய்யுளாகவும் இருக்கலாம், உரைநடையாகவும் இருக்கலாம். செய்யுளாக இருப்பதே சிறந்ததென்று கூறுவார்கள். காவியப் புலவராகிய இலக்கியக் கலைஞர் கவிதைகளையும் காவியங்களையும் சொல்லோவியமாகப் புனைகின்றனர். ஓவியக் கலைஞர் தங்களுடைய ஓவியத்திலும் சிற்பத்திலும் அமைத்துக் காட்ட முடியாத சில நுட்பங்களைக் காவியப் புலவர் தங்களுடைய எழுத்தோவியங்களில் அழகாக அமைத்துக் காட்டுகிறார்கள். சொற்களைக் கொண்டு நுட்பமான கருத்துக்களைப் புனைந்துரைக்கும் ஆற்றல் இலக்கியப் புலவருக்கே யுண்டு.

ஓவியங்களிலும் சிற்பங்களிலும் காட்டப்படுகிற அழகுகளையும் நுட்பங்களையும் கவிதையில் காட்ட முடியாதென்றும், அவ்வாறே கவிதையில் காட்டப்படுகிற அழகுகளையும் நுட்பங்களையும் ஓவியத்திலும் சிற்பத்திலுங் காட்ட முடியாதென்றும் முன்னமே கூறினோம். இலக்கியக் கலைஞருக்கே யுரிய தனிச் சிறப்பை, ஓவியத்திலுஞ் சிற்பத்திலுங் காட்ட முடியாத நுட்பங்களை, இலக்கியக் கலைஞர் அமைத்துள்ள சொல்லோவியங்கள் சிலவற்றை இங்கு எடுத்துக் காட்டுவோம். ஓவியக் கலைஞர், கட்புலனுக்குக் காட்டித் தெரிவிக்க முடியாத சில விடயங்களைக் கவிஞர் தம்சொற்களினாலே எளிதாக அறிவுப் புலனுக்குக் காட்டித் தெரிவிக்கிறார். ஓவியக் கலையில் அமைத்துக் காட்ட முடியாத கருத்துக்களை இலக்கியக் கலைஞர் தம்முடைய சொல்லோவியங்களில் எவ்வாறு எளிதாக அமைத்துக் காட்டுகிறார் என்பதைப் பார்ப்போம்.

காதலின் அளவு :

இரண்டு இளம்பெண்கள் கடற்கரையில் வெண்மணலில் அமர்ந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருத்தி காதலையறிந்த கன்னிப்பெண். மற்றொருத்தி கன்னிப் பருவத்தையடையவிருக்கிற இளம்பெண். இவர்களைச் சூழ்ந்து பரந்த நிலப்பரப்பு காணப்படுகிறது. எதிரிலே, அலைமோதுகின்ற அகன்று ஆழமான நீலக் கடற்பரப்பு காட்சியளிக்கிறது. மேலே, உயரத்தில் பரந்த பெரிய வானம் காணப்படுகிறது. காதலையறியாத இளம்பெண் காதலையறிந்த கன்னிப் பெண்ணைக்

கேட்கிருள். "என்ன, காதல் காதல் என்று கூறுகிருய்! காதல் என்ன அவ்வளவு பெரிதா? நீயும் நானும் எத்தனே காலமாகப் பழகி அன்பாக இருக்கிறேம்? நம்முடைய அன்பைவிட உங்களுடைய காதல் அவ்வளவு பெரியதா?"

இதற்கு விடையளிக்கிருள் காதலேயறிந்த கன்னிப்பெண். தான் கண்ட காதலின் ஆழத்தையும் அகலத்தையும் உயரத்தையும் தன் இளந்தோழிக்கு அளந்து கூறுகிருள்.

காதல் இந்தப் பெரிய உலகத்தைவிட மிகமிகப் பெரியது. அதன் உயரம், எட்ட முடியாத இதோ இந்த வானத்தைவிட அதிக உயரமானது. ஆழமோ, இதோ இந்த ஆழமான கடலின் ஆழத்தைவிட அதிக ஆழமானது என்று காதலின் அளவைத் தெரிவித்தாள் அப் பெண்மகள்.

"நிலத்தினும் பெரிதே! வானினும் உயர்ந்தன்று!
நீரினும் ஆரள வின்றே! சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனெடு நட்பே!"
(உயர்ந்தன்று-உயர்ந்தது. அளவின்று-அளவில்லாதது.)

நான்கு அடியுள்ள இந்தச் சிறிய சொல்லோவியத்திலே இரண்டடிக்குள்ளேயே மிகச் சுருக்கமாகக் காதலின் அகலம் ஆழம் உயரங்களேச் சொல்லிவிட்டாள் அப் பெண். இல்லே, அப் பெண்ணின் வாயிலாக இலக்கியப் புலவர் கூறிவிட்டார். இந்தச் சொல்லோவியத்தைப் புனேந்தவர் தேவகுலத்தார் என்னும் பெயருள்ள சங்ககாலத்துப் புலவர். இவருடைய இந்த அழகான சிறிய செய்யுள் குறுந்தொகையில் மூன்ருவது செய்யுளாக அமைந்துள்ளது.

பெரிய கருத்தமைந்த இந்தச் சிறிய சொல்லோவியத்தில் கூறப்படுகிற காதலின் அகலம் ஆழம் உயரங்களே ஓவியக் கலேஞர் ஓவியமாகவோ சிற்பமாகவோ அமைத்துக்காட்ட இயலுமோ? நிலத்தையும் கடலேயும் வானத்தையும் அழகாக வரைந்து காட்டலாம். ஆனல், காதல் நிலத்தினும் பெரிது, வானினும் உயர்ந்தது, கடலினும் ஆழமானது என்று எவ்வாறு ஓவியந் தீட்டிக்காட்ட முடியும்? முடியாதன்றே?

தெய்வத் திருவருள்:

அப்பரடிகளே நாவுக்கரசர் என்று ஆன்றேர் போற்றியது சாலப் பொருந்தும். திருநாவுக்கரசரின் சொல்லோவியங்கள் வளமுள்ளவை. அவருடைய சொல்லோவியங்களில் ஒன்றைக்

கவிதையின் ஆற்றலுக்கு உதாரணமாகக் காட்டுவோம். கடவுளின் திருவடி நிழல் (தெய்வத் திருவருள்), எப்படியிருந்தது என்பதை அவர் சொல்லோவியமாகக் காட்டுகிறார் :

> "மாசில் வீணையும் மாலை மதியமும்
> வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்,
> மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணையடி நீழலே."

இளவேனிற்காலம், மாலை நேரம், பால் போன்ற நிலா வெளிச்சம், தாமரைக்குளம், தென்றற் காற்று, வீணையின் இனிய இசை இவ்வளவும் ஓரிடத்தில் ஒருங்கே அமைந்திருப்பது போன்றது கடவுளின் திருவருள் இன்பம் என்று நாவுக்கரசர் தீட்டிய சொல்லோவியத்தை ஓவியக் கலைஞர்கள் ஓவியந் தீட்டிக் காட்ட முடியாது. ஓவியமாகவோ சிற்பமாகவோ அமைத்துக் காட்டினாலும் இச் செய்யுளின் முழுக் கருத்தையுங் காட்ட இயலாது. இச் செய்யுளைப் படித்துப் படித்துச் சுவைத்துச் சுவைத்து உணர்ந்து உணர்ந்து அனுபவிக்க முடியுமேயல்லாமல் ஓவியத்தில் எழுதிக்காணமுடியாது.

நெல்வயல் :

வயலிலே நெற்பயிர் செழிப்பாக வளர்கிறது. வளர்ந்த பசும்பயிர் கதிர்விடும் நிலையை யடைகிறது. சிறிது காலங் கழித்துக் கதிர் வெளிப்பட்டுப் பூத்துத் தலை நிமிர்ந்து நின்று காற்றில் சுழன்று ஆடுகிறது. சில காலங் கழித்துக் கதிர் முற்றிப் பொன்னிறமடைந்து தலைசாய்கிறது. கதிர் முழுவதும் முற்றிய பிறகு அடியோடு தலைசாய்ந்து விடுகிறது. நெல்வயல் காட்சியைப் பலருங் கண்டிருக்கிறோம். கண்டவர்களில் சிலர், வயல் காட்சியின் இயற்கை இன்பத்தைக் கண்டு மகிழ்ந்தும் இருப்பார்கள். பச்சைப் பசேல் என்று இருக்கும் இளம் பயிர்க் காட்சி, அது நிமிர்ந்து வளர்ந்து நிற்குங்காட்சி, கதிர் வெளி வராததற்கு முன்புள்ள காட்சி, கதிர் வெளிப்பட்டுப் பூத்து நிமிர்ந்து காற்றில் அசையுங் காட்சி, மணிமுற்றின பயிர் தலைசாயுங் காட்சி, முழுவதும் முற்றிய பயிர் மஞ்சள் நிறமாக மாறிப் படுத்திருக்குங் காட்சி இவையெல்லாம் இயற்கைக் காட்சியில் ஈடுபட்டவருக்கு இன்பந் தருவன. இலக்கியக் கலைஞரும் காவியப் புலவருமான திருத்தக்கதேவர் இந்த இயற்கைக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தார். இக்காட்சிகளைக் கண்ட அவருடைய உள்ளத்திலே சில கருத்துக்கள் தோன்றின. வயல் காட்சியில் தாம் கண்ட கருத்துக்களை அமைத்துக்

சொல்லோவியம் புனைந்து தருகிறார் தம்முடைய சீவக சிந்தா மணிக் காவியத்தில்.

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று, மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித், தேர்ந்த நூற்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே."

சூல்பசும் பாம்பின் தோற்றம்போல்—பச்சைப் பாம்பு கருவுற்றிருப்பது போல. கருக்கொண்ட பச்சைப் பாம்பின் தோற்றம் போல, கதிர் வெளிப்படுவதற்கு முன்னே நெற்பயிரின் தோற்றம் இருந்தது என்பது கருத்து. ஈன்று-கதிர் விட்டு. தலைநிறுவி-தலைநிமிர்ந்து. இறைஞ்சி-வணங்கி, சாய்ந்து.

கதிர்கள் பூத்துத் தலைநிமிர்ந்து நிற்பதும் காற்றில் சுழன்றாடுவதும் ஆகிய காட்சி, கீழ்மக்கள் செல்வம் பெற்றால் அவர்கள் யாரையும் மதிக்காமல் இறுமாந்திருப்பதும் தலைகால் தெரியாமலிருப்பதும் போலக் காணப்பட்டது. முற்றின கதிர்கள் சாய்ந்து தலைவணங்கி இருக்கிற காட்சி, கற்றறிந்த அறிஞர் அடக்கமாக இருப்பதுபோன்று காணப்பட்டது. இவ்வாறு, நெற்பயிரில் தாம் கண்ட காட்சியையுங் கருத்தையும் திருத்தக்கதேவர் இச் செய்யுளில் கூறுகிறார். இச் செய்யுளில், கவிதைக்கு இருக்க வேண்டிய உண்மை, அழகு, இனிமை மூன்றும் இருப்பது காண்க.

ஓவியக் கலைஞரும் சிற்பக் கலைஞரும் நெல்வயலின் இந்த அழகான காட்சிகளைக் கண்கவர் ஓவியமாகவும் சிற்பமாகவும் அமைத்துக் காட்ட இயலும். ஆனால், பூத்த நெற்கதிர்கள் 'மேலலார் செல்வம்போல் தலை நிறுவி'யதும் மணிமுற்றிய கதிர்கள் 'கல்விசேர் மாந்தரின் இறைஞ்சி' நிற்பதும் ஆகிய உவமேயக் கருத்துக்களை எவ்வாறு அமைத்துக் காட்ட இயலும்? இயலாதன்றோ? இது கவிதைக்கே யுரிய இயல்பு அல்லவா?

யார்க்கும் இனியவர்...?:

இன்னொரு சொல்லோவியத்தைப் பார்ப்போம். அழகான குளம். அதில் தாமரைக் கொடிகளும் ஆம்பற் கொடிகளும் செழித்துப் படர்ந்திருக்கின்றன. மாலை நேரம். சூரியன் சாய்ந்து மறைந்துவிட்டது. குளத்திலே மலர்ந்திருந்த தாமரைப் பூக்கள் மெல்ல இதழ்களை மூடிக் குவிகின்றன. சூரியன் மறைந்த பிறகு வானத்திலே வெண்ணிலா பால்போலக் காயத் தொடங்குகிறது. அப்போது குளத்தில் இருக்கும் ஆம்பல்

மொட்டுகள் மெல்ல இதழ்களை விரித்து மலர்கின்றன. மலர்ந்திருந்த தாமரைப் பூக்கள் சூரியன் மறைந்த பிறகு கூம்புவதும், மலராதிருந்த ஆம்பல் மொட்டுக்கள் மாலை நேரத்தில் இதழ் விரித்து மலர்வதும் இயற்கையில் நிகழ்கிற காட்சிகளே. ஆனால், இந்த இயற்கைக் காட்சிகளைக் கண்ட தோலாமொழித் தேவருக்கு உலகியல் வழக்கம் ஒன்று புலப்படுகிறது. அவர், குளத்தில் உள்ள நீர்ப் பூக்களில் தாம்கண்ட இயற்கையையும் உலகத்தில் தாம்கண்ட செயலையும் இணைத்துப் பொருத்தி ஒரு சொல்லோவியம் புனைந்து தருகிறார் தம்முடைய சூளாமணிக் காவியத்தில்.

> "அங்கொளி விசும்பில் தோன்றும்
> அந்திவான் அகட்டுக் கொண்ட
> திங்களங் குழவிப் பால்வாய்த்
> தீங்கதிர் அமுதம் மாந்தித்
> தங்கொளி விரிந்த ஆம்பல்,
> தாமரை குவிந்த ஆங்கே,
> எங்குளார் உலகில் யார்க்கும்
> ஒருவராய் இனிய நீரார்?"

இந்தச் சொல்லோவியத்தில், நிலாவெளிச்சத்தைக் கண்டு ஆம்பல் மலர்வதும் தாமரை கூம்புவதுங் கூறப்படுகின்றன. இதுபோலவே, நல்ல இனியவர்களைக் கண்டு சிலர் மகிழ்வதும் சிலர் வெறுப்பதும் ஆகிய உலகியல் உண்மையும் இச் செய்யுளில் பொருத்திக் கூறப்படுகின்றன. காவியப் புலவரின் இந்தச் சொல்லோவியக் கருத்தை ஓவியக் கலைஞர் ஓரளவுதான் (தாமரைக் குளத்தை மட்டுந்தான்) ஓவியம் எழுதிக் காட்ட முடியும். இச் செய்யுளின் முழுக் கருத்தையும் எழுதிக் காட்ட இயலாது. தாமரைக் குளத்தையும் அதனுள் மலர்ந்துங் கூம்பியுங் கிடக்கிற ஆம்பல்மலர் தாமரை மலர்களையும் விண்ணில் வெண்ணிலாவையும் ஓவியர் சித்திரமாக எழுதிக் காட்ட இயலும். ஆனால், "எங்குளார் உலகில் யார்க்கும் ஒருவராய் இனிய நீரார்?" என்னும் காவியப் புலவரின் கருத்தை ஓவியக் கலைஞர் எழுதிக் காட்ட இயலுமோ? இது காவியப் புலவருக்கே யுரிய தனிச் சிறப்பன்றோ?

### சிறுவெள்ளாம்பல் சிரித்தது:

இதே தாமரைக் குளக் காட்சியை இன்னொரு வகையாகக் கூறுகிறார் காவியப் புலவரான தோலாமொழித் தேவர். குளத்தில் மலர்ந்திருந்த தாமரை மலர்கள் சூரியன் மறைந்த பிறகு

குவிந்து விடுகின்றன. அதனைக் கண்டு சிரிப்பதுபோலச் சிறிய வெள்ளாம்பல் மலர்கள் இதழ் விரித்து மலர்கின்றன. இது, காதலரைப் பிரிந்த கற்புடைமகளிர் மனம் வருந்தி முகம் வாடுவது போலவும் அவர்களைக் கண்டு சிறுமனம் படைத்தோர் சிரித்து மகிழ்வது போலவும் இருக்கிறது என்று காவியப் புலவர் கூறுகிறார்:

> "காதலர் அகன்ற போழ்தில் கற்புடை மகளிர் போலப்
> போதெலாங் குவிந்த பொய்கைத் தாமரை பொலிவு நீங்க
> மீதலாந் திகிரி வெய்யோன் மறைதலும், சிறுவெள் ளாம்பல்
> தாதெலாம் மலர நக்குத் தம்மையே மிகுத்த வன்றே."
>
> (சூளாமணி, கல்யாணச்சருக்கம் – 203)

இக் கருத்தைச் செய்யுளிலே யமைத்துக் கூற இயலுமே யல்லாமல், ஓவியத்தில் தீட்டிக் காட்ட முடியாதன்றே? இது கவிதைக்கேயுள்ள தனிச்சிறப்பு.

**மணமில்லாக் கோங்கும் குணமில்லாச் செல்வரும்:**

தோலாமொழித் தேவர் தம்முடைய சூளாமணிக் காவியத்தில், பூஞ்சோலையில் பூத்த கோங்கிலவ மலர்களைக் காட்டுகிறார். அதிலும் ஒரு சிறந்த உலகியல் உண்மையைக் கூறுகிறார்.

வேனிற்காலம் வந்துவிட்டது. அரசனுடைய பூஞ்சோலையில் செடிகளும் கொடிகளும் மரங்களும் பூத்திருக்கின்றன. கோங்கிலவ மரங்களிலே கோங்கு மலர்கள் மிக அழகாகப் பூத்துச் சிறப்பாக இருக்கின்றன. இவற்றையெல்லாங் கண்ட வயந்த திலகை என்னும் அரண்மனைத் தோழி அரசனிடம் வந்து இந்தச் செய்தியைக் கூறுகிறாள்:

> "தேங்குலாம் அலங்கல் மாலைச் 'செறிகழல் மன்னர்மன்ன!
> பூங்குலாய் விரிந்த சோலைப் பொழிமதுத் திவலை தூவக்
> கோங்கெலாம் கமழ மாட்டாக் குணமிலார் செல்வ மேபோல்
> பாங்கெலாம் செம்பொன் பூப்ப விரிந்தது பருவம்' என்றாள்."
>
> (சூளாமணி, இரதநூபுரச் சருக்கம் - 43)

பொன்னிறமுள்ள கோங்குமலர் கண்ணையுங் கருத்தையும் பறிக்கும் எழில் உடையது. பறித்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டு மோந்து மணத்தை நுகரலாம் என்னும் விருப்பத்தைத் தரத்தக்கது அதனுடைய செவ்வி. இவ்வளவு அழகும் செவ்வியுமுள்ள கோங்கு மலருக்கு மணமில்லையே! மணம்

மட்டும் இருந்தால் எவ்வளவு சிறப்புப்பெறும்! செல்வ நலம் பெற்றிருந்தும் குண நலம் பெருதவர் போலல்லவா இருக்கிறது!

ஓவியக் கலைஞர், கோங்கு மலரை எழில் மிக்க ஓவியமாகத் தம்முடைய கைத்திறத்தினுல் வண்ணச் சித்திரமாக்கித் தர முடியும். ஆனுல், வயந்த திலகை வாயிலாகக் காவியப் புலவர் கூறுவதுபோல, 'ஈகைக் குணமில்லாத செல்வர் புகழ் பெருதது போல, கோங்கு மலர் மணமில்லாமலிருக்கிறது' என்னும் சிறந்த கருத்தை ஓவியக் கலைஞர் சித்திரத்தில் எழுதிக் காட்ட ஒண்ணுது.

'கல்வியிற் பெரியன் கம்பன்' என்பது பழமொழி. கம்ப சூத்திரங்களை யறிந்து மகிழாதவர் யார்? இந்தக் காவியப் புலவனின் சொல்லோவியங்கள் சிலவற்றைப் பார்ப்போம். ஓவியக் கலைஞனும் சிற்பக் கலைஞனும் தங்களுடைய ஓவியத் திலும் சிற்பத்திலும் காட்டமுடியாத நுட்பங்களை இவர் எப்படி எளிமையாகத் தம்முடைய கவிதையில் காட்டுகிருர் என்பதைப் பார்ப்போம்.

**கவிதைப் பேராறு :**

இராமனும் இலக்குவனும் கோதாவிரியாற்றைக் கண் டார்கள் என்று காவியக் கலைஞர் கம்பர் கூறுகிருர். கூறு கிறவர், கோதாவிரியாற்றைத் தேர்ந்த புலவரின் தமிழ்க் கவிதைக்கு ஒப்புமை கூறுகிருர். இச் சொல்லோவியத்தைப் படியுங்கள் :

"புவியினுக் கணியாய் ஆன்ற
பொருள்தந்து புலத்திற் ருகி
அவியகத் துறைகள் தாங்கி
ஐந்திணை நெறிய ளாவிக்
கவியுறத் தெளிந்து தண்ணென்
ருெழுக்கமும் தழுவிச் சான்ருேர்
கவியெனக் கிடந்த கோதா
விரியினை வீரர் கண்டார்."

புகழ்பெற்ற கோதாவிரி ஆறு பாரதநாட்டின் பெரிய ஆறு களில் ஒன்று. இதனுடைய எழில் மிக்க இனிய இயற்கைக் காட்சிகளை ஓவியக் கலைஞர் கண்ணைக் கவரும் ஓவியமாக எழுதிக் காட்டலாம். ஆனுல், புலவர் உவமையாகக் கூறுகிற கோதாவிரியாற்றையும் காவியப் புலவரின் கவிதையையும் எப்படிப் பொருத்திக் காட்ட இயலும்? "சான்ருேர் கவியெனக்

கிடந்த கோதாவிரி'' என்பதில் சித்திரத்தில் எழுதிக் காட்ட ஒண்ணுத எத்தனையோ கருத்துகள் பொதிந்திருக்கின்றன. இவ்வாறு சொல்லோவியம் அமைப்பது காவியப் புலவருக்கு மட்டுமே யுரியது.

புல்லர்க்குச் சொன்ன பொருள்

அரக்கியாகிய தாடகையை இராமன் அம்பு எய்து கொன்ருன். அவன் எய்த அம்பு தாடகையின் நெஞ்சில் பாய்ந்து ஊடுருவி வெளிப்பட்டு அப்பால் சென்றது. இதுதான் இராமாயணச் செய்தி. ஆனால், கம்பன் இச் செய்தியைக் கூறுகிற செய்யுளில் அரியதொரு கருத்தைப் புகுத்தி இச் செய்யுளுக்குத் தனிச் சிறப்புக் கொடுத்துவிட்டான். தாடகையின் நெஞ்சில் புகுந்து வெளிப்பட்ட அம்பு, அறிவுடையோர் சொன்ன நன்மொழி அறிவில்லாதவர் மனத்தில் தங்காமல் அகன்று போய்விடுவது போல அகன்று போயிற்று என்று கூறுகிருர் :

''சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னுள்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்கா தப்புறங் கழன்று 'கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப்' போயிற் றன்றே.''
(பாலகாண்டம், தாடகைவதைப்படலம். (72.)

ஓவியக் கலைஞரும் சிற்பக் கலைஞரும் தாடகையின் நெஞ்சிலிருந்து அம்பு வெளிப்படுவதுபோல ஓவியந் தீட்டியும் சிற்பம் அமைத்துங் காட்டலாம். ஆனால், 'புல்லர்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்று' என்பதை எவ்வாறு காட்ட இயலும்? இது காவியப் புலவருக்கே யுரிய தனித் திறமையன்றோ?

யாரே வடிவினை முடியக் கண்டார்?

கம்பரின் இன்னெரு சொல்லோவியத்தைப் பார்ப்போம். இராமன் மிதிலை நகரத்தில் உலா வருகிருன். அவனைக் கண்ட மகளிர் அவனுடைய உடல் அமைப்பின் எழிலைக் கண்டு வியந்தார்கள். ஆனால், அவர்கள் அவனுடைய முழுவுருவத்தின் வனப்பைக் காணுமல் ஒவ்வோர் உறுப்பை மட்டுங் கண்டு வியந்தார்கள். இப்படி வியந்தது, முழுமுதற் கடவுளின் முழு உருவத்தைக்காண முடியாத சமயங்கள் (மதங்கள்) அக் கடவுளின் ஒவ்வொரு குணத்தை மட்டுங் கூறுவதுபோல இருந்தது என்று கூறுகிருர். பலரும் அறிந்தது இந்தச் செய்யுள்.

"தோள்கண்டார் தோளே கண்டார், தொடுகழல் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார், தடக்கைகண் டாரும் அஃதே,
வாள்கண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கண்ட சமயத் தன்னான் உருவுகண் டாரை ஒத்தார்."
(பாலகாண்டம், உலாவியற் படலம்-19

(ஊழ்கண்ட - ஊழினால் கண்ட. அன்னான் உருவு - கடவுளுடைய உருவம்.)

இதில் கூறப்பட்ட 'ஊழ்கண்ட சமயத்தன்னான் உருவு கண்டாரை ஒத்தார்' என்பது ஓவியக் கலைஞர் எழுதிக் காட்ட முடியாத ஒன்று. சிற்பத்திலும் ஓவியத்திலுங் காட்ட முடியாதது.

பசையற்ற மனம் :

நீர் இல்லாமல் வரண்டுகிடக்கிற பாலைவனத்தைக் கம்பர் கூறுகிறார். பாலைவனத்தின் வரட்சியைத் துறவிகளின் மனத்துக்கும் வேசையரின் மனத்துக்குங் கம்பர் உவமை கூறுகிறார். வீடுபேற்றைக் கருதி உலகப்பற்றை விட்டுத் தவஞ் செய்கிற துறவியின் மனம் பசையற்றிருப்பது போலப் பாலைவனம் பசையற்று வரண்டு கிடக்கிறது. அன்றியும் பொருள் ஒன்றையே நோக்கமாகக் கொண்ட வேசையர் மனம் தம்மிடம் வந்து பொருள் கொடுப்பவரிடத்தில் அன்பு இல்லாமல் பசையற்றிருப்பதுபோலப் பாலைநிலம் வரண்டு பசையற்று இருந்தது என்று கூறுகிறார்.

"தாவரும் இருவினை செற்றுத் தள்ளரு
மூவகைப் பகையரண் கடந்து முத்தியிற்
போவது புரிபவர் மனமும், பொன்விலைப்
பாவையர் மனமும்போல் பசையும் அற்றதே."
(பாலகாண்டம்-தாடகைவதைப் படலம்-15)

(தாவரும்-துன்பம் வருவதற்குக் காரணமாகிய. இருவினை-நல்வினை தீவினை. மூவகைப்பகை-காமம், வெகுளி, மயக்கமாகிய முப்பகை, புரிபவர்-செய்பவர். புரிபவர்-விரும்புகிறவர். துறவிகள் மனம் பற்றற்றது. விலைமாதர் மனம் அன்பற்றது.)

இந்த உவமையை ஓவியத்திலும் சிற்பத்திலும் காட்ட முடியாது.

பொன்னே, மணியே :

காவிரிப்பூம் பட்டினத்தில் கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது. திருமணத்துக்குப் பிறகு

இருவருந் தனித்திருந்து காதல் இன்பம் நுகர்ந்து உரையாடினார்கள். அவ்வமயம் கோவலன் கண்ணகியை வியந்து பாராட்டினான். கோவலன் பாராட்டியதைக் காவியப் புலவர் இளங்கோவடிகள் கவிதையாகத் தருகிறார் தம்முடைய சிலப்பதிகாரக் காவியத்தில்.

"மாசறு பொன்னே ! வலம்புரி முத்தே !
காசறு விரையே ! கரும்பே ! தேனே !
அரும்பெறற் பாவாய் ! ஆருயிர் மருந்தே !
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே !
மலையிடைப் பிறவா மணியே என்கோ !
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ !
யாழிடைப் பிறவா இசையே என்கோ !"

(சிலம்பு, மனையறம்படுத்தகாதை (73-79)

பொருள் பொதிந்த அருமையான இந்தச் சொல்லோவியத்தை ஓவியர் சித்திரமாகவும் ஓவியமாகவும் எழுதிக்காட்ட இயலுமோ? இயலாதே.

கரும்பே! தேனே!

இலக்கணை என்னும் பெயருள்ள மணமகளைச் சீவகசிந்தாமணி காவியம் இவ்வாறு பாராட்டுகிறது.

"கரும்பே ! தேனே ! அமிர்தே ! காமர் மணியாழே !
அரும்பார் மலர்மேல் அணங்கே ! மழலை யன்னமே !
சுரும்பார் சோலை மயிலே ! குயிலே ! சுடர்வீசும்
பெரும்பூண் மன்னன் பாவாய் ! பூவாய் ! பிணைமானே !"

(இலக்கணையார் இலம்பகம். 76)

இந்த இனிய செய்யுளின் கருத்தை ஓவியர் எப்படிச் சித்திரம் தீட்ட முடியும்? கவிஞரின் கவிதைக்கே யுரிய தனிச் சிறப்பன்றோ இது!

இளமையைத் தேடுகிறார்!:

இளமை கழிந்து மூத்து முதிர்ந்த கிழவர் திரைத்த தோலும் நரைத்த தலையும் தளர்ந்த உடம்பும் உள்ளவர். நிமிர்ந்து நிற்க முடியாமல் குனிந்து, கையில் உள்ள தடியைத் தரையில் ஊன்றி நடக்கிறார். குனிந்து நடக்கிற இவர், தரைமேல் விழுந்து போனது எதையோ தேடுகிறவர் போலக் காணப்படுகிறார். இந்தக் கிழவரின் காட்சி, தம்மிடமிருந்து விழுந்துபோன இளமையைத் தேடுகிறதுபோல இருக்கிறது என்று கவிஞர் நகைச்சுவைபட வெகு நயமாகக் கூறுகிறார்.

"கம்பித்த காலன் கோலன்
　　கையன கறங்கு தண்டன்
கம்பித்த சொல்லன் மெய்யைக்
　　கரையழி நரையுஞ் சூடி
வெம்பித்தன் இளமை மண்மேல்
　　விழுந்தது தேடுவான்போல்
செம்பிற்கும் பிளித்த கண்ணன்
　　சிரங்குனிந் திறங்கிச் செல்வான்."

முதுகு வளைந்து தரையைப் பார்த்துக் கோலூன்றித் தள்ளாடி நடக்கிற கிழவரின் ஓவியத்தை ஓவியக் கலைஞர் சிற்பமாகவும் சித்திரமாகவும் வெகு நன்றாக அமைத்துக் காட்ட முடியும். ஆனால், அவர் குனிந்து நடப்பது, 'விழுந்து போன தம்முடைய இளமைப் பருவத்தைத்' தேடி நடப்பது போல இருக்கிறது என்னுங் கருத்தை ஓவியத்திலும் சிற்பத்திலுங் காட்ட முடியாதே! இந்தக் கருத்தைச் செய்யுளில் படிக்கும் போது எவ்வளவு உவகைபொங்குகிறது படிப்பவர் மனத்தில்!

வெயிலெரிக்கும் வெஞ்சுரம்:

பாலை பாடிய பெருங்கடுங்கோ சேர அரசர் குலத்தைச் சேர்ந்தவர். அவர் பாலைத்திணைச் செய்யுட்களையே பாடியுள்ளார். அவர் பாடிய செய்யுள் ஒன்றில் பாலை நிலத்தையும் அங்குள்ள பட்டுப்போன மரத்தையுங் கூறுகிறார். கூறுகிறவர் தாம் கண்ட உலகியல் உண்மைகளைப் பட்டுப்போன மரத்துடன் பொருத்திக் கூறுகிறார்.

நீர் அற்ற பாலைவனத்தில் சூரியனின் வெம்மை தவிர அங்கு வேறொன்றுங் கிடையாது. தப்பித் தவறி அங்கிருக்கிற மரங்கள் கருகிச் சாய்ந்து கிடக்கின்றன. உலர்ந்து பட்டுப் போன சில மரங்கள் அந்தப் பாலை நிலத்தின் வெம்மைக்குச் சான்று பகர்கின்றன. வேர் முதல் நுனி வரையில் உலர்ந்து போன மரத்தில் இலைகளை எதிர்பார்க்க முடியுமா? இலைகள் இல்லாத காய்ந்து போன மரத்தின் கீழே தங்குவதற்கு நிழல் இல்லை. கிளைகள் எல்லாம் வற்றிக் காய்ந்து கிடக்கின்றன. பட்டுப்போன மரத்தின் காட்சியைக் கண்ட பெருங்கடுங்கோவின் மனத்தில் என்னென்னவோ எண்ணங்கள் தோன்றுகின்றன. கடைசியில் அவருடைய கருத்துக்கள் அழகான செய்யுள் வடிவமாக வெளிப்படுகின்றன. இச் செய்யுளைப் படியுங்கள்.

"வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணும் இகந்துசெய்து இசைகெட்டான் இறுதிபோல்

வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்
அலவுற்றுக் குடிகூவ ஆறின்றிப் பொருள் வெஃகிக்
கொலையஞ்சா வினைவரால் கோல்கோடி அவன்நிழல்
உலகுபோல் உலரிய உயர்மர வெஞ்சுரம்.'' (பாலைக்கலி-10)

(சினைய-கிளைகளையுடைய. இகந்து செய்து-செய்பத் தகாதவற்றைச் செய்து. இசை-புகழ். ஆறின்றி-(நீதி) முறைபல்லாமல். வெஃகி-விரும்பி. வினைவர்-அரச ஊழியர். உலகுபோல்-குடிமக்கள்போல.)

வறுமையுள்ள இளையவன் பொருளில்லாமையால் இன்பம் துய்ப்பதற்கு முடியாமல் வருந்துவதுபோல அந்த மரக் கிளைகள் வாடிக் கிடக்கின்றன. சிறுமைப்பண்போடு செல்வமுள்ளவன் தன்னைச் சேர்ந்தவரின் துன்பத்தைப் போக்காமல் விடுவதுபோல அந்த வற்றல்மரம் தன்னையடைந்தவருக்கு நிழல் தராமல் இருக்கிறது. நல்லது செய்து புகழ் பெருமல் எல்லோர்க்குந் தீமை செய்து 'பாவி' என்று பெயரெடுத்தவனைப்போல மரம் வேரோடு காய்ந்து கிடக்கிறது அம்மட்டோ? அரச ஊழியர் பொருளாசையினல் குடிமக்களை வருத்த அதனல் ஏற்பட்ட கொடுங்கோலாட்சியின் கீழ் உள்ள குடிமக்கள் வாழ வழியில்லாமல் மனம் வாடி வெதும்பி நிற்பதுபோல் பட்டுச் சாய்ந்து போன பாலைநிலத்து மரங்கள் புலவருக்குக் காட்சியளிக்கின்றன.

பல கருத்துக்கள் பொதிந்த இந்த அழகான செய்யுளை இன்னொரு முறை படித்துப் பாருங்கள். இந்தக் கருத்துக்களையெல்லாங் கவிஞன் தன்னுடைய கவிதையில் கூற முடியுமேயல்லாமல் ஓவியன் சித்திரமாக எழுதிக் காட்ட முடியுமா?

இவ்வாறு பல சொல்லோவியங்களைத் தமிழ்ச் செய்யுட்களிலிருந்து காட்டலாம். விரிவஞ்சி இதனேடு நிறுத்துகிரேம். அறிஞர்கள் இவைபோன்ற எண்ணற்ற செய்யுட்களைத் தமிழ் இலக்கியச் சோலையில் கண்டுகண்டு மகிழலாம்.

ஓவியக் கலைஞரும் காவியக் கவிஞரும் சில கருத்துக்களைத் தங்கள் தங்கள் ஓவியத்திலும் இலக்கியங்களிலும் பொதுவாகக் காட்ட முடியும். ஆனல், காவியக் கலைஞர் மட்டுஞ் சில கருத்துக்களைத் தங்கள் செய்யுள்களில் காட்டுவதுபோல் ஓவியக் கலைஞர் தங்கள் சித்திரங்களிலும் சிற்பங்களிலுங் காட்ட முடியாது. இதைத் தான் மேலே விளக்கிக் காட்டினேம்.

காவியக் கலைஞர் வேறு சில அழகுகளையும் தங்கள் செய்யுள்களில் அமைத்துப் படிப்பவருக்கு மகிழ்ச்சியையும் இன்பத்தையும் அளிக்கிருர்கள். பலவித ஓசை சந்தம் எதுகை மோனை முதலியவற்றை அழகாக அமைத்துச் செய்யுள் புனைகின்ருர்கள். அவற்றை இன்னேர் இடத்தில் கூறுவோம்.

———

# புலம்பச் செய்த புயலும் வெள்ளமும்

இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னர் (30—11—1952இல்) தஞ்சை திருச்சி மாவட்டங்களில் வீசிய சூறைப் பெருவளி குறித்துச் சங்க இலக்கியங்களிற் பெரும்பான்மைக்கு உரை எழுதிய பெருமழைப் புலவர் அவர்கள் பாடிய பாடல்கள் செல்வி சிலம்பு: 27. பரல்: 5 இல் வெளியிடப்பட்டுள்ளன. அவையே ஈண்டுத் தரப்படுகின்றன. இப்புலவரவர்கள் சங்க இலக்கியங்கட்கு மட்டுமன்றிச் சிலப்பதிகாரம், மணிமேகலை, பட்டினத்தார் பாடல்கள், கல்லாடம் ஆகிய நூல்கட்கும் சிறந்த உரை எழுதியுள்ளார். மேலும் உரை நடை, நாடகம் நூல்கள் எழுதுவதிலும் இவர் சிறந்து விளங்கினர்.

## புயலோ! புயல்!! புயல்!!!

[பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனர்]

பித்தேறி ஞானிறைவன் நல்லருளைக்
கைவிட்டான் பெருங்காற் றூனன்
மத்தேறி யுடைதயிர்போல் மன்னுயிர்கள்
உடைந்தொழிய மலக்கஞ் செய்தே
செத்தேயிங் கொழிகவெனச் சினந்திட்டான்
பேய்போலச் சீறு நின்றான்
கொத்தேறு குழலுமையும் முகிலாயங்
கவனோடே கூடி னாளால்! 1

திடுதிடென உலகதிரத் திசைநடுங்க
வானிருளத் தெய்வ மஞ்சச்
சடசடவென் றொலிபடத்தீந் தருவெல்லாம்
வேரோடே சாய்ந்து வீழக்
கடகடவென் றேநகைத்தான்! கடல்பெருகித்
திடரேறிக் கலகஞ் செய்யப்
படபடவென் றேமாந்தர் பயத்தாலே
குலைநடுங்கிப் பதைத்து வீழ்ந்தார்! 2

எளியோர்கள் சிறுகுடிலும் எழிலோங்கு
மாளிகையும் இரைந்து சீறித்
துளியோங்கு மழையோடே சூறைவளி
சாடுதலால் சுவர்கள் சாயப்
புளியோங்கு மாமரமே தென்னைமரம்
வாழைமரம் புதல்பூண் டோடே
களியோங்கு பைங்கூழும் கரும்புகளும்
பாழாகிக் கழிந்த வாலோ! ௩

சுற்றென்றே யிருந்திட்டார் காலையிலே
மாலையிலே கடுங்காற் ருகிக்
கூற்றென்றே உருக்கொண்டு கூ! கூ! வென்
றேயார்த்துக் குமைத்தல் கண்டார்
மாற்ருென்றும் அறியாதே மாந்தரெலாந்
திகைத்திட்டார் மகார்கள் தம்மைப்
போற்றும்வகை அறியாதே தாயரழப்
புதல்வர்களும் பொருமி னூரால். ௪

பட்டினியால் வாடுகின்ற ஏழைகுடில்
பெரும்பொருளே படைத்து வாழ்வோர்
கட்டியுயர் நீண்மாடம் சிருர்பயிலும்
கூடங்கள் சிதைத்து யாவும்
குட்டிநெடுஞ் சுவராகப் பாழ்படுப்ப
அச்சுவரைக் குறுகி நின்றே
ஒட்டியுயிர் ஓம்பினரால் மானிடவர்
சுவரின்றேல் ஒருவ ருய்யார்! ௫

ஆடிழந்தேம்! என்றழுதார்! ஆனிழந்தேம்!
என்றழுதார்! அந்தோ! வாழும்
விடிழந்தேம்! என்றழுதார் மேதையிலா
மானிடவர்! விண்ணிற் ருேயும்
கோடிருந்தே வாழ்குரங்குங் குதித்தாடும்
அணிற்குழூவும் பிறவுங் கீதம்
பாடிமகிழ் பறவைகளும் இழந்தேமென்
றழுவாரைப் பார்த்தி லேமால்! ௬

'நில்லாது பொருளுலகின் நில்லாது
　　யாக்கையிவை நிலையென் றெண்ணி
ஒல்லாத தீவினைசெய் துழலாதீர் !
　　அறஞ்செய்ம்மின் ! உலகீர் !' என்றே
சொல்லாலே மெய்ந்நூல்கள் சொல்வனவும்
　　கேளாராய்ச் சுகித்து வாழும்
கல்லாத புல்லருநேர் கண்டுணர
　　வகைசெய்தான் காற்றுத் தேவன். 7

'சிற்றுயிரும் சிற்றுடலும் சின்னாளும்
　　உடையீரே ! செருக்கேன் மின்னே !
உற்றுயிர்வாழ் உலகெல்லாம் ஒருநொடியின்
　　நீருக்கி ஊதித் தீர்ப்பேம் !
பெற்றவுயர் யாக்கையினுற் பெறுபயனும்
　　பெறீர்தெய்வம் பேணீர் ! வீணீர் !
உற்றநும வாழ்க்கையிஃதிங் குறுஞ்சிறுமை
　　கண்டிருமென்' றுணர்த்தி னானல் ! 8

காற்றாகி உயிர்க்குயிராய்க் காப்பானும்
　　நீயொருநாட் கருணை மாறிக்
கூற்றாகிச் சினஞ்சிறந்து கொல்வானும்
　　நீயென்னில் யாமென் செய்கோம் ?
தேற்றாதே பெரும்பாவம் செய்கின்றேஞ்
　　சிறுமையினுற் செய்கை ! தேறிப்
போற்றாதேம் ! எனினுமெமைப் பொருளாகச்
　　சீறுவதோ ! புகழான் மிக்கோய் ! 9

படைத்திடுவாய் உலகுயிரைப் பரிந்தோம்பிக்
　　காத்திடுவாய் ! பரனே ! மீண்டுந்
துடைத்திடுங்கால் காற்றாகிக் கூற்றாகிச்
　　சூழ்பிணியாய்த் துயரே செய்து
புடைத்திடுவாய் எனினுமிவை அருளென்றே
　　புகல்கின்றார் புலமை நூலோர்
சடைத்திகழும் பெருமா ! நின் றிருவருளே
　　வெல்கவெனத் தாழ்வே மன்னே. 10

———

## புயல், வெள்ளக் கொடுமைகள்

கடந்த 12—11—77க்கும் 20—11—77க்கும் இடைப்பட்ட நாட்களில் தமிழகம், ஆந்திரம், கருநாடகம், கேரளம் ஆகிய தென் மாநிலங்களைப் பேரல்லல்களுக்கு உட்படுத்திய புயல், வெள்ளக்கொடுமைகள் பற்றிப் புலவர் பெருமக்கள் பலர் பாடிய செய்யுட்கள் கீழே தரப்படுகின்றன.

### வெள்ளச் சேத விளரி

[ஞா. தேவநேயப் பாவாணர்]

எத்தனை வெள்ள மோநாம் இதுவரை கதையிற் கேட்டோம்
இத்தனை கொடுமை யாக எவருமே கண்ட தில்லை
அத்தனார் கோயி லுள்ளும் அனைவரும் நசுங்கிச் சாகப்
பித்தமா வெறியின் வேகம் பிடித்தது காற்றுப் பூதம்.

வெள்ளமென் றறிவிப் பின்றி வீட்டினுள் உறங்கும் வேளை
கொள்ளையர் வருதல் போலக் கூடிய இரண்டு பூதம்
பொள்ளெனக் கேடு செய்யப் பொடித்தன பணிச்சா லைகள்
தள்ளிர வன்றே நாகை நத்தப்பா ழாயிற் றந்தோ!

கண்ணினுக் கெட்டு மட்டும் கண்டது வெள்ளக் காடு
மண்ணியல் ஊர்தி யொன்றும் மற்றவூர் சென்ற தில்லை
உண்ணவோர் உணவு மில்லை உரைக்கவோர் வழியு மில்லை
விண்ணவர் உதவி போலூண் வீழ்ந்தது மூன்றும் நாளே.

தமிழ்நிலந் தலையாஞ் சென்னை தாவியே தெலுங்க நாட்டில்
இமிழ்கடல் எரியுந் தோன்ற எழுமலை யலைக ளாலே
அமிழ்கரை யூர்கள் மாய்ந்தார் ஆயிரம் பத்தோடைந்தும்
குமிழ்நுரை வெள்ளம் வந்து குடிகொண்ட தூர்க ளெல்லாம்.

ஆருயி ரனைய என்றன் அன்பனை யிழந்தேன் என்பார்
கார்பணி கற்பின் செல்வக் கண்ணகி யிழந்தேன் என்பார்
சீரிய அறிவு வாய்ந்த சேயரை இழந்தேன் என்பார்
ஊரினில் உள்ள எல்லா உறவையும் இழந்தேன் என்பார்.

இரவிலே தந்தை தாயை இழந்தபிள் ளைகள் காலை
அருவிபோற் கண்ணீர் சிந்தி அம்மையப் பனையே கூவி
வெருவியே யழுது தேம்பி வெந்தழல் மெழுக போல
உருகியுள் வெந்த கோலம் உள்ளுவார் குலையும் வேதும்.

அருந்தலாய் விற்ற காலை அரும்பெரும் பாடு பட்டு
வருந்தியே தேடிப் பெற்ற வளம்படு பொருளும் வீடும்
பருந்தடி குஞ்சு போலப் பசக்கென மறைந்து போக
இருந்துபின் அழுது நைந்தார் எத்தனை பேர்க ளம்மா!

அரசனே கொடுமை செய்யின் ஆரிடம் சொல்வ தென்பர்
பரசுறு கடவுள் காப்பும் பறந்திடின் நாமென் செய்வாம்
துருசினில் மாயும் மக்கள் தொல்லைகள் தீரும் வண்ணம்
கரிசொடு செருக்கொ ழிந்து காவல்பூண் அமைச்சர் ஆள்க.

## அறந் தானோ? இறைவா!

[நாரண - துரைக்கண்ணன்]

ஐயகோ! என்ன சொல்வேன்?
    ஆற்ருெணுக் கொடுமை! அந்தோ!
பையவே சுழன்ற காற்று
    புயலாக மாறி நம்மைக்
கையறவு கொள்ள வைத்த
    கொடுமையைக் கூறப் போமோ?
வையத்தில் விளைந்த பச்சைப்
    பயிரெலாம் பாழாய்ப் போச்சே!          1

'வான்மழை அமிழ்த' மென்றே
    வள்ளுவர் குறளில் சொன்ஞர்;
தேன்துளி போன்று வானம்
    சொரியாது புயலாய் மாறின்,
நாற்றிசை நடுங்கி நிற்கும்;
    நஞ்சாகி நாசஞ் செய்யும்;
மாண்பயன் கெட்டே போகும்;
    மக்களும் மாண்டு போவார்.          2

இருநாட்டில் இதுதான் கண்டோம்;
    என்னென்ன கொடுமை கேட்டோம்?
தருநிகர் தஞ்சை, நாகை,
    தென்திசை முற்று மாகப்
பெரும்புயல் காற்று வீசிப்
    பல்பொருள் நாச மாக்கிக்
கருங்கடல் போல நஞ்சைக்
    கொட்டியே கெடுத்தது; அம்மா!          3

பெய்துமே கெடுக்கும் வானம் ;
 பெய்யாதுங் கெடுக்கும் என்பார்;
கொய்கதிர் சூறைக் காற்றில்
 கொத்தாகக் கொட்டிப் போச்சே!
மெய்யாக மழைதான் இன்று
 மேதினி குலுங்க வைத்து
நைவித்த துயிர்கள் தம்மை ;
 நாசமே பலவாய் ஆச்சே! 4

## கோரப் புயலே!

[கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம்]

கோரப் புயலே! — கொலை
காரப் பயலே!
கோடிக் கணக்கில் சேதம்விளைத்த
கொடுமையும் ஏனோ? — நீ
கூற்றுவன் தானோ?

நாகப் பட்டினம் கரையைத் தாக்கி
 நாட்டில் புகுந்தாயே!
நன்செய் புன்செய் தோப்பும் துரவும்
 நாசம் செய்தாயே!

வேகத் தாலே கடலும் குமுறி
 விண்ணும் கொட்டியதே!
வெள்ளம் புரண்டு பிரளயம் போலே
 வேதனை முட்டியதே!

உன்வெறி யாட்டம் எத்தனை எத்தனை
 உயிரைக் குடித்ததுவே!
வன்முறை யாலே மக்களை வதைக்கும்
 வஞ்சகம் ஏன் கொண்டாய்?

அந்தக் காலம் லெமூரி யாவை
 ஆழியும் விழுங்கியதே! — அந்த
அவலத் தாலே செந்தமிழ் நாட்டின்
 அளவும் சுருங்கியதே!

## உள்ளமுருக்கும் வெள்ளமும் காற்றும்

[தவத்திரு தி. செ. முருகதாச அடிகள்]

வெண்பாக்கள்

சீரியலும் நந்தமுயர் செந்தமிழ்நாட்டினில் வாழ்
யாரிதுபோல் மக்க ளிருந்துயரம்—சேரிழப்பு
கண்டாரு மில்லை; கழறிடக்கா தாற்கேட்டுக்
கொண்டாரு மில்லையுண்மைக் கூற்று. 1

கூற்றுவன்வந் தாலுயிரைக் கொள்வான்; கொடியபுயற்
காற்றுடனே வெள்ளம் கடுகியதால்—தேற்றும்
வகையறியா தின்னல் வயப்பட் டிறந்தோர்
தொகையறிவார் யாவருளார் சொல். 2

சொல்லா லளவிட்டுச் சொல்லயம னுந்தெரியான்
வல்ல சமனுமிந்த வாருகப்—பல்லுயிரைப்
பற்ப லிடத்திற் பலிகொண்டா னே! யிதனைச்
சொற்பனத்தும் எண்ணினருண் டோ! 3

உண்டோ இழந்த உயிர்கட் குறுங்கணக்கு?
உண்டோ இழந்த உடைமைக்கண்—உண்டோதன்
கண்ணீர் விடுத்தழுவார் கட்காம் கணக்குண்டோ
தண்ணீரில் மாய்ந்தார் தமக்கு. 4

## வழங்கிடுவோம், வருவீரே!

[கோ. வே. பெருமாள்.]

தேனூறும் ஆறுபல செழிப்பூட்டும் தென்னாடு,
வானூறும் கதிர்மதியம் வயங்குகின்ற பொன்னாடே!
ஊனூறும் உழைப்பினையே உன்னுகின்ற இந்நாடு,
கானூறும் கவின்செல்வம் கனிவிக்கும் நம்நாடே! 1

இன்னமுதத் தமிழகத்தே ஏர்தஞ்சை திருச்சியிலே,
என்னென்போம்? முன்பொருகால், இருபத்தைந் தாண்டேமுன்
பன்னியவா யிரத்துத்தொள் ளாயிரத்தைம் பத்திரண்டில்,
மின்னுங்கார்த் திகைத்திங்கள் மிக்கபுயல் தாக்கியதே! 2

வங்கப்புயல் இப்போதும், வந்திருமுறை சூறையாகி,
அங்கங்கே மழைவெளத்தால், அழிநிலைமை தந்ததுவே!
மங்காத ஆந்திரமும் மலையாளம் கன்னடமும்
எங்குமிலா இத்துயர்க்கே இலக்காகி நொந்தனவே! 3

இன்னதென்றே புரியவொண்ணு இயற்கைகொண்ட சீற்றமிதை,
என்னவென்றே ஆராய இயன்றிலமே, யாயிடினும்,
முன்னோர்கள் சொல்லிவைத்தார், முழுமுருக வுணர்வினையே;
பின்னவர் நாம் புறக்கணித்தோம்; பிழையுணரும்பெற்றியிலோம்!

என்செல்வம் எனதுபொருள் யானென்பார் செருக்கறுக்க,
இன்னவணம். புயல்மழையே! இன்னல்துயர் தந்தாயோ?
தன்னலத்தால் இறுமாந்தே தடுமாறும் தறுகணர்க்கே
மன்னியற்கை நெறிகாட்டி, மதியூட்ட வந்தாயோ? 5

## யாதென்று கூறிடுவோம்!

[வித்துவான் தி. மு. சங்கரலிங்கம்]

கன்னித் தமிழ்நாட்டைக் கன்னடத்தை ஆந்திரத்தை
இன்னற் படுத்திவிட்ட இப்புயல்போல் வெள்ளம்போல்
துன்னக் கொடுமைதனைத் தொல்லுலகில் யார்பெறுவர்?
என்ன உரைத்திடுவோம்; யாதென்று கூறிடுவோம். 1

ஒருநாளா இருநாளா ஓங்குமழை, புயல்,வெள்ளம்?
வருநாளில் என்னுமோ வகையறியா உளநடுக்கம்
பெருவாழ்வு கொண்டவரும் பெற்றிட்டார் என்றுரைத்தால்
தருவாழ்வு கொள்ளெளியர் தமைப்பற்றி என்புகல்வேம். 2

வீடிழந்தார் பலருண்டு; வெள்ளத்தின் பாதிப்பால்
மாடிழந்தார் பலருண்டு; மக்களுடன் மனைவி
கூடிழந்தார் பலருண்டு; குலவுபயிர் நலமுறச்செய்
பாடிழந்தார் பலருண்டு; பார்க்கப்பரி தாபமன்றே? 3

தென்னை யுடன்வாழை சீரான பனைபிறவும்
கன்னலொடு நெல்தேக்கு களிப்பூட்டும் இவையெல்லாம்
பன்னரிய புயலாட்சிப் பாங்கதனுல் வீழ்ந்ததென்றல்
என்னவெனக் கூறிடுவோம்; எதிர்கால வாழ்வெதுவோ? 4

## வற்றுமோ கண்ணீர்?

[மின்னூர் சீனிவாசன்]

சுழலடித்தது புயலடித்தது
 சூறை யடித்தது நாடெலாம்—பார்
 தூக்கி யடித்தது வீடெலாம்!

விழலடித்தது வயலடித்தது
 விளைவடித்தது மாமழை—அவ்
 விண்வடித்தது பேய்மழை! 1

ஓட்டையானது வானகம்பெருஞ்
 சாட்டையானது புயலடா!—இது
 சரிதங் கண்டிடாப் புயலடா!

மாட்டைக் கன்றினை மனிதரைமிக
வாட்ட வந்ததிப் புயலடா !—காலன்
காட்ட வந்ததிச் செயலடா !　　2

உள்ளங் காடெனத் துயரம் மண்டிட
வெள்ளக் காடென மாறியே—கெட
வீறு புயலது சீறியே !

கொள்ளை கொண்டது வளமும் உயிர்க்குலக்
கொத்த ழிந்திடச் செய்ததே—அழிவுக்
கூத்து மழையெனப் பெய்ததே !　　3

மாலைமாலையாய் மனிதர் கண்களும்
வற்றி டாதகண் ணீருமே—வடிக்க
வாழ்வு கெட்டதைக் கூறுமே !

காலப் புயலுடன் ஓலமிடுமழை
கனத்த தீனியைத் தந்ததாய்—கொடுங்
கழுகுக் கூட்டமும் வந்ததே !　　4

வீழ்ந்த பிணமலை அழுகி நாறிட
விரைந்து போயின கழுகெலாம்—கொத்த
விண்ப றந்தன பொழுதெலாம் !

வாழ்ந்த மானிட வாழ்வு தானொரு
மாயக் கனவென லானதே—உயிர்
மாயக் கனவென லானதே !　　5

## ஊழி இதுதானோ !

[கவிஞர், சி. து. கன்னிசாமி]

தஞ்சைத் தரணிமுதல் தண்டமிழ்நா டும்தெலுங்கர்
தஞ்செழுநா டும்புயல்தான் தாக்கியதே—பஞ்சுபடும்
பாட்டினிலே மாந்தரினம் பாழ்பாழ் ! அவர்துயரம்
நாட்டுதற்கார் வல்லார் நவில்.　　1

உலகில்வாழ் பேயனைத்தும் ஒன்ருகக் கூடிக்
கலகமிடும் கூத்திதுவோ ! காண்பார்—நிலைகுலைய
நெஞ்சம் இருண்டார் நினைவிழந்தார் மாமழைதான்
அஞ்சிடவே விண்ணதிரும் ஆங்கு.　　2

ஏரி குளம்உடைய எண்ணற்ற ஆறுகள்தாம்
வாரியென ஊர்புகுத வையமெலாம்—சீரிழப்ப
நிற்குமிடம் காணர் நிலைகுலைந்தார் மாந்தரெலாம்
உற்றதுயர் சொல்லுதற்கார் உண்டு. 3

மக்கள் இழந்தார் மனையிழந்தார் கால்நடைகள்
தொக்கபொருள் அத்தனையும் தோற்றெழிந்தார் - இக்கணத்தில்
சென்றெதுங்கும் வாய்ப்பின்றிச் சீரிழந்தார் ஈதேகாண்
நின்றெழிந்தார் தங்கள் நிலை. 4

நாளை அறுவடைஆம் என்றிருந்த நல்வயல்கள்
முளுற்ற வெள்ளத்தில் மூழ்கினவே—மாளுற்றூர்
பல்பிணங்கள் ஏந்திப் பரந்தபுனல் பேரிரைச்சல்
எல்லை கடந்தொலிக்கும் ஈண்டு. 5

கடுகிப் புயல்வெள்ளம் கால்ஈர்ப்பச் சாய்ந்து
படுபிணங்கள் கொள்ளையினைப் பார்ப்பின்—அடுகளத்தில்
செங்கணன் ஆற்றியபோர்ச் செய்கை நினைப்பிக்கும்
இங்கிதற்கு வே(று)உவமை ஏது ? 6

## மடப்புயல்

[கவிஞர் அரு. சோமசுந்தரன்]

பல்லாண்டாய் மழையின்றிப் பரித வித்த
பாரதத்தின் தென்பகுதி மக்க ளுக்குச்
சொல்லாமல் இருமாதம் பெய்து கெட்டுச்
சொத்தெல்லாம் அரித்ததுடன் சூறை யாடிக்
கொல்லாமல் கொன்றதெலாம் நவம்பர் மாதம்
கொட்டாத மழையெல்லாம் கொட்டித் தீர்த்தாய் !
வில்லாக இரும்பெல்லாம் வளைத்து விட்டாய்
வீடெல்லாம் மேடாக விளைத்து விட்டாய். 1

கடல்நாகை எனஎண்ணிப் புகழ்ந்த மண்ணைக்
கண்மூடித் திறவாமுன் மிதக்க வைத்துத்
திடமான வீடெல்லாம் நொறுக்கி விட்டுத்
தெருவெல்லாம் பிணக்காடாய் மாற்றி மண்ணை
முடமாக்கும் மடப்புயலே! வங்க மென்னும்
முத்தான கடலுக்குள் தோன்றி இங்கே
இடம்பிடிக்க வந்தாயோ ? மழையைக் கொட்டி
இடிஇடிக்க வந்தாயோ ? எதற்கு வந்தாய் ? 2

பாலாற்றில் பேருந்து வீழ்ந்த தாலே
　பலபேரின் உயிர்கொண்டாய்; வேடசெந்தூர்
நாலாறு திசைவீழக் குடக ஞற்றின்
　நாற்கோடி அணைபேர்த்துப் பலரைக் கொன்ருய்
சேலாறு காவிரியும் சீரங் கத்தில்
　சேராத கொள்ளிடமும் சேர்த்து வைத்தாய்
கோளாறு புயலாகி வருவ துண்டு
　கூற்ருகி மண்ணெல்லாம் குடிப்ப துண்டோ!　3

சாலையெலாம் உடைத்ததனல் போக்கு மில்லை
　சலசலக்கும் வெள்ளத்தால் வரத்து மில்லை
ஆலையெலாம் கொன்றதனல் மூச்சு மில்லை
　அடைமழையாய் நின்றதனல் பேச்சு மில்லை
காலைமுதல் கோழிவரை மிதக்க விட்டாய்
　கட்டடங்கள் குடிசையெலாம் பறக்க விட்டாய்
பாலைவிடும் தோப்பெல்லாம் பலியா டாக்கிப்
　பயிர்விளையும் நிலமெல்லாம் மண்மே டாக்கி.　4

எளியோரின் உயிர்குடித்தாய் தமிழர் நாட்டில்
　இருநூறு கோடிக்குச் செலவு வைத்தாய்
வளியாக வந்தெம்மை வதைத்த தோடு
　வங்கத்தில் மறுபுயலாய் வடிவெ டுத்துச்
சுழியாகிச் சூறையென ஆந்தி ரத்தில்
　சுற்றுலா மேற்கொண்டு குண்டூர், கிருஷ்ண
வழியான மாவட்டம் விரைய மாக
　வெறியாட்டம் போட்டதெல்லாம் வெற்றி தாஞ?　5

கண்ணான தென்னட்டைச் சாடு தற்கே
　கடலோடும் முகிலோடும் கைகள் கோத்துப்
பண்ணான இடிபேச மின்னல் கூசப்
　படையெடுத்து வந்தகடும் புயலே! எங்கள்
புண்ணான நெஞ்சத்தால் பாடு கின்ருேம்
　புயலேநீ வாராதே! பொறுமை பூண்டு
மண்ணான தனுக்கோடி பூம்பு காரை
　மறவாமல் எண்ணிக்கொள் மறைந்தே போ போ!　6

## புயலோ புயல்

[கவிஞர் த. கோவேந்தன்]

புயலோபுயல் புயலோபுயல் புகுந்தாடிய தெங்கும்
பொழியும்மழை சுழற்காற்ரெடு பொங்கும்கடல் ஆடி
வயற்காடில்லை தோப்பும்இல்லை துரவும்இல்லை, மேலும்
வாழும்உயிர், எவையும் இல்லை மாந்தர் இல்லை எனவே
புயலோபுயல் புயலோபுயல் புகுந்தாடிய தெங்கும்! 1

இயற்கைகொடும் சீற்றத்துடன் தென்னாட் டினில்ஆடி
இரக்கம் எனும் பண்பொன்றிலா அரக்கித்தனம் தன்னைத்
துயருக்கொரு முடிவெல்லையே இல்லைஎனச் சொல்லிச்
சுரண்டும்கொடு முதலாளியம் மேலாம்எனும் வண்ணம்
புயலோபுயல் புயலோபுயல் புகுந்தாடிய தெங்கும்! 2

வறுமைப்புயல் வந்தேதிகள் வாட்டும் துயர்ப் புயலால்
வாழ்வில்நலம் இழந்தோம்உயிர் வாழ்வைஇழக் கிலமே,
சிறுமைப்புயல் சிதைவுப்புயல் மொழிப்பற்றிலார் ஆட்சி
சிதைத்தும்இனம் செத்தோம்இலை சிறப்போம் எனவாழ்ந்தால்
புயலோபுயல் புயலோபுயல் புகுந்தாடிய தெங்கும்! 3

மாடில்லையாம் மனையில்லையாம் மற்றும்பல இல்லையாம்
மனத்தின்துயர் புயல்பேய்மழை எனவே துடித்தேங்கக்
கேடில்உடன் பிறவாஉயர் மாந்தர்குடும் பங்கள்
கிளையோடில்லை கேட்டோம்இதைக் கேட்டுக்கிடர் இல்லையோ?
புயலோபுயல் புயலோபுயல் புகுந்தாடிய தெங்கும்! 4

ஒருநாளில்லை இருநாளில்லை முந்நாளில்லை அடடே
ஓயாப்புயல் ஊர்கள்உடல் புதையாப் பிணக்காடாய்
அருமாமணி நூல்கள்தமைக் குமரிக்கடற் கீந்த
அஃலற்கிணை அவலம்தனை இன்றும் அடைவண்ணம்
புயலோபுயல் புயலோபுயல் புகுந்தாடிய தெங்கும்! 5

## ஆடிய வன்புயல்!

[பாவலரேறு பெருஞ்சித்திரனார்]

வானங் கருத்தது; வையம் இருண்டது;
வாரி யெனுந்தட நீர்அலை கொண்டது!
தானென் செருக்குடன் தண்கடல் சீய்த்தொரு
தாண்டவச் சூறைவான் தாவி யெழுந்தது!

கானம் படுவன் களிற்றினம் யாவுமே
காழ்நடை ஆர்ப்பொடு காய்ந்திவண் வந்ததாய்க்
கூனம் படுநெடுங் குன்றுங் குலுங்கிடக்
கொல்புயல் பேய்ப்படை கொண்டெதிர் ஆர்த்ததே! 1

ஆர்த்தது வான்புயல்! ஆர்த்தது நீள்கடல்!
ஆவெனும் ஓலத் தெழுந்தது பேரலை!
போர்த்தது நீர்த்திரை! பொங்கிச் சுழன்றது!
போய்வரு மீன்பிடி புன்மைப் படகுகள்
நீர்த்துமி தாண்டவத் துட்பொடி யாயின!
நீண்ட நெடுங்கரை நின்ற மரக்கலஞ்
சூர்த்த பெரும்புயற் சூறைச் சுழியிடைச்
சுக்குநூ றாகிச் சுருண்டன நீருளே! 2

கண்ணை யளாவிப் பறித்தொளி மின்னிடக்
காதை யளாவிக் கிழித்திடி மேல்விழ
விண்ணை யளாவித் திமிர்ந்தெழு வான்புயல்
வேதம் அளாவிச் சுழன்றெதிர் வீசிட
எண்ணை யளாவிய தென்னை,வா ழைக்குலம்
ஏந்துபூம் பிஞ்சுகா யோடெழு மாவினம்
மண்ணை யளாவிட மாமலை போலெழு
மந்திர ஆழிமுன் மக்களென் செய்வரோ? 3

பாய்புனல் காய்கனி பூமரம் பாவிட
பாற்கதிர் சாய்வயல் பாறுமண் மேடிட
வேய்குடில் நூறுநூ றாயிரம் நூறிட
வீறிடும் செம்புனல் வீழ்கரை மீறிட
காய்வயி றேருழல் ஏழையர் கையற
காலப் பெரும்புன லோடு கலந்துகால்
வாய்வழி யோடி வயல்வெளி பாறிய
வன்பிணக் காட்டிடை ஆடிய வன்புயல்! 4

ஆடிய வன்புயற் கந்தமிழ் நாடுமிங்
காந்திர முங்கள மாகி அதிர்ந்தன!
வாடிய மக்களுக் காறுதல் வாய்மொழி
வாழ்க்கை யுதவிகள் பற்பல வாய்க்கினும்
நாடிந ரம்புந டுக்கந் தவிர்க்குமோ?
நற்றுணை மாண்ட குழந்தையர் நங்கையர்
நீடிய வெந்துயர் நீங்கிடக் கூடுமோ?
நீண்ட நெடுங்கட லே,விடை சொல்கவே! 5

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## உலகச் சைவஉணவாளர் 24 ஆவது மாநாடு

இந்திய சைவ உணவாளர் கழகத்தின் சார்பில் உலகச்சைவ உணவாளர் 24 ஆவது மாநாடு 2—12—77 இல் சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் துவங்கிற்று. தமிழக ஆளுநர் மாண்புமிகு பிரபுதாஸ்பட்வாரி அவர்கள் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினர். இந்தியக் குடியரசு துணைத்தலைவர் மாண்புமிகு பி. டி. சாட்டி அவர்கள் மாநாட்டைத் துவக்கி வைத்தார். முன்னாள் நடுவர் என். கிருட்டிணசாமி ரெட்டி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர்.

இம் மாநாடு தொடர்ந்து 3, 4, 5 ஆம் நாள்களில் நடைபெற்றது. முறையே டாக்டர் இரத்தினவேலு சுப்பிரமணியம், தெ. து. சுந்தரவடிவேலு, இராசா சர் முத்தையாசெட்டியார் ஆகியோர் தலைமை தாங்கினர். அறிஞர்கள் பலர் உரையாற்றினர். அவருள் டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், கி. வா. சகந்நாதன், தவத்திரு ஊரன் அடிகள், தமிழக அரசுச் செயலர் வி. கார்த்திகேயன், கோவை வேளாண்மைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் கோ அரங்கசாமி, டாக்டர் பா. நடராசன் ஆகியோர் குறிப்பிடத்தக்க தமிழறிஞர்களாவர். இம் மாநாட்டினை யொட்டிக் காய்கறிகள் கண்காட்சி, இயல்-இசை-நாடக அரங்குகள் ஆகியனவும் நடத்தப்பெற்றன.

## மாம்பாக்கம் குருகுலத்தில் மெய்கண்டார் விழா

சைவசமய சந்தான குரவர்களான மெய்கண்டார், அருணந்திசிவம் ஆகியோர் திருநாள் 10—11—77 இல் மதுராந்தகம் திருக்குறள் பீடம் குருகுலம் உணவகத்தில் திருக்குறள் பீடாதிபதிகள் அருட்திரு அழகரடிகள் முன்னிலையில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. மயிலம் தவத்திரு சிவஞானபாலய அடிகள் தமிழ்க்கல்லூரிப் பேராசிரியர் திரு. பழ முத்தப்பன் பி. ஏ., சைவப்புலவர் திரு. மா. அமிர்தலிங்கனர், புலவர் கோ. சுப்பிரமணியம் ஆகியோர் முறையே மெய்கண்டார். போதமும் சித்தியும், சாத்திர அறிவு என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினர். உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. ம. நாராயணசாமி பி ஏ., பி. டி. அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். அழகரடிகள் அருளுரை வழங்கினர். பொருளாளர் ந. சுப்பிரமணியம் நன்றி உரை ஆற்ற விழா இனிது நிறைவேறிற்று.

## வடமொழிக்கு ஆக்கம் வளரும் வகை!

வேதங்கள் பற்றிய நூல்களையும் மற்றும் முதன்மையான சமக்கிருத நூல்களையும் அச்சிடுவதற்கான புது அச்சகம் ஒன்று காஞ்சிகாமகோடி பீடம் ஸ்ரீ ஜயேந்திர சரசுவதி சுவாமிகள் வாழ்த்துடன் திருச்சியில் துவக்கப்பட இருக்கிறது. இதனை அமைக்க திருச்சிப்பெருமக்கள் சிலர் தலைக்கு ரூ. 5000 நன்கொடை வழங்க முன் வந்துள்ளனராம். இப்பணிக்கு அறங்காவலர் குழு ஒன்றும் அமைந்துள்ளதாம்.

## தவத்திரு ஆறுமுகநாவலர் 98ஆம் குருபூசை விழா

தவத்திரு ஆறுமுகநாவலர் அவர்களின் 98 ஆவது குருபூசை விழா 3—12—77 இல் சிதம்பரம் சேக்கிழார் கோயிலில், அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் துணைப் பேராசிரியர் திரு. கு. சுந்தர மூர்த்தி, எம். ஏ., அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது. இவ் விழாவினையொட்டி மாணவர் பேச்சுப் போட்டி, பாடல் போட்டி, மற்றும் இசைநிகழ்ச்சிகள் ஆகியனவும் நடைபெற்றன.

## ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றம்

29—11—77 இல் சென்னை ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றக்கூட்டம் நடைபெற்றது. கலித்தொகை(நெய்தல்) என்னும் பொருள் பற்றி டாக்டர் ஔவை நடராசன் அவர்கள் சொற்பொழிவாற்றினர்.

## பழனியப்பா உயர்நிலைப் பள்ளி இலக்கியக்கழகம்

சோழபுரம் பழனியப்பா உயர்நிலைப்பள்ளி இலக்கியக்கழகத்தில் 20—10—77 இல் "குறள்கூறும் நெறி தனிமனிதனுக்கென்றே சொல்லப்பட்டதா? சமுதாயத்திற் கென்றே சொல்லப்பட்டதா?" என்னும் பொருள் பற்றிப் பட்டிமன்றம் நடைபெற்றது, தவத்திரு குன்றக்குடி அடிகளார் நடுவராக இருந்தார். திரு. ப. லட்சுமணன் பி. ஏ. வரவேற்புரை நிகழ்த்தினர். பட்டிமன்ற முடிவில் "குறள் சமுதாயத்திற் கென்றே சொல்லப்பட்டது" என்று நடுவர் அடிகள் தீர்ப்புக் கூறினர்.

## தேவார ஓதுவா மூர்த்திகள் சங்கம்

தேவார ஓதுவா மூர்த்திகள் சங்கச் சார்பில், சைதாப்பேட்டை அருள்மிகு சிவ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலில் 11-12-77 அன்று காலை 8 மணியளவில் 23வது திங்கள் வழிபாடும் நால்வர் படத்திறப்பு விழாவும் தேவாரம் த. நடராசன் அவர்கள் தலைமையில் ஓதுவா மூர்த்திகள் ஒன்றுகூடிச் சிறப்பாக நடத்தினர். வீதி வலத்தின்போது அன்பர்கள் சிலரின் இல்லங்களில் நால்வர் திருவுருவப் படங்கள் திறந்து வைக்கப்பட்டன. இதுகாறும் இச் சங்கத்தார் சைதாப்பேட்டையில் 80; இராயப்பேட்டையில் 40; கீழ்ப்படப்பையில் 57; எம். ஜி. ஆர். நகரில் 20 என்ற எண்ணிக்கையில் நால்வர் திருவுருவப் படங்களைத் திறந்து வைத்துள்ளனர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் சிலம்பு-ரு, கடு௨-௨ பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| கழக ஆட்சியாளர் உயர்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் நவ. 77 நன்கொடை | 100-00 |
| கழக மேலாளர் உயர்திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் நவ. 77 நன்கொடை | 5-00 |
| திரு. வே. நடராசன், எரகுடி | 5-00 |
| திரு. கா. இராமராசு, திருச்சி (திருச்சிக்கிளை மேலாளர்மகன் பிறந்த நாள் நன்கொடை) | 5-00 |

# மதிப்புரை

## அலை கடலுக்கு அப்பால்

[ஆசிரியர்: சாரதா நம்பியாரூரன், எம். ஏ. வெளியீடு: கூடல் பப்ளிஷர்ஸ், மதுரை-625001. விலை: ரூ. 12-00 ]

இஃது ஒரு பயணநூல். மறைமலையடிகளாரின் பெயரரான திரு. நம்பியாரூரன் அவர்களின் துணைவியாரான திருவாட்டி சாரதா நம்பியாரூரன் அவர்கள் தம் கணவருடன் இலண்டன் மாநகர் சென்று மூன்றரை ஆண்டுகள் தங்கி இருந்ததோடு ஐரோப்பிய நாடுகள் பலவற்றையும் சுற்றிப் பார்த்துத் தம் பயணச் செய்திகளைச் சுவைபடக் கூறியுள்ளார். மேலைநாடுகட்குச் செல்லவும் அவற்றைப்பற்றி அறியவும் விரும்புவோர்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும். இனிய எளிய தமிழில் அமைந்த நூல். அழகிய பதிப்பு.

## கடற்கரைக் காதலர்

[ஆசிரியர்: டாக்டர் தி. முத்துக்கண்ணப்பன் வெளியீடு: அதிபத்தர் பதிப்பகம், அருணாசலபுரம், சென்னை-20. விலை: ரூ. 8.00.]

நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய சங்க இலக்கியங்களினின்றும் நெய்தல் திணையைச் சார்ந்த பதினேழு பாக்களை எடுத்துக் கொண்டு அவற்றை அரிய நாடகக் காட்சிகளாகச் சுவைபட விளக்கி வரைந்துள்ளார் இந் நூலாசிரியர். அழகிய வண்ண ஓவியங்கள் இடையிடையே மிளிர்கின்றன. சங்க இலக்கியப் பாக்களின் சுவையை அறிய விழைவார்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

## நாட்டுப்புறப் பாடலும் பண்பாடும்

[ஆசிரியர்: வே. அந்தனி ஜான் அழகரசன், எம். ஏ. கிடைக்குமிடம்: சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1. விலை: ரூ. 4-00.]

நாட்டுப்புறப் பாடலும் பண்பாடும் பற்றிப் பதினெட்டுத் தலைப்புகளில் திறம்பட ஆராய்ந்து சுவைபட எழுதியுள்ளார் இந் நூலாசிரியர். சங்க இலக்கியங்கள் மற்றும் சிற்றிலக்கியங்களிலும், விவிலியத்திலும் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் அமைந்துள்ளமையையும், நாட்டுப்புற இலக்கியங்களில் தத்துவக் கருத்துகள், பழக்க வழக்கங்கள் முதலியவற்றையும் ஆராய்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இலங்கையிலும், மேலைநாடுகளிலும் வழங்கும் நாட்டுப்புறப் பாடல்கள் பற்றிய ஆராய்ச்சியும் இந் நூலில் இடம் பெற்றுள்ளன. தெள்ளிய தமிழ்நடையில் அமைந்துள்ள சிறந்த நூல்.

## தொல்காப்பிய விருந்து

[ஆசிரியர்: கு. மோகனராசு எம். ஏ. வெளியீடு: அருள்வாழ்வுப் பதிப்பகம், 12. தலைவாரித் தெரு, சென்னை-4. விலை: ரூ. 3-50.]

'பிசி ஓர் அகழ்வாய்வு', 'கொடிநிலை கந்தழி வள்ளி மறு ஆய்வு', 'அகத்திணையியல்—சில அறநோக்குகள்', 'தொல்காப்பியம் காட்டும் தாய்' என்னும் நான்கு தலைப்புகளில் ஆராய்ந்து எழுதப்பட்ட கட்டுரைக் கோவையே இந் நூல். நூலாசிரியரின் புதிய ஆராய்ச்சி நோக்கு குறிப்பிடத்தக்கது. 'தொல்காப்பிய விருந்து' ஆராய்ச்சியாளர்க்கு ஒரு நல் விருந்து.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| மங்கல மனைமாட்சி—ந. சஞ்சீவி, கிருஷ்ணு சஞ்சீவி | 3 | 75 |
| இலக்கிய இயல் அ-ஆ—டாக்டர் ந. சஞ்சீவி | 10 | 00 |
| ஆராய்ச்சிக் கட்டுரைகள் ,, | 10 | 00 |
| தொல்காப்பிய விருந்து—கு. மோகனராசு | 3 | 50 |
| திருக்குறளில் வேளாண்மை—இல. செ. கந்தசாமி | 4 | 00 |
| வேளாண்மையும் பண்பாடும் ,, ,, | 6 | 00 |
| ஓ, அன்றில் பறவைகளே! ,, ,, | 6 | 00 |
| அலைகடலுக்கு அப்பால்—சாரதா நம்பியாரூரன் | 12 | 00 |
| சைவ இலக்கியக் கோவை—அ. விநாயகமூர்த்தி | 6 | 50 |
| வாழுங்கலை—தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் | 1 | 75 |
| 6 ஓரங்க நாடகங்கள்—மா. பா. குருசாமி | 4 | 00 |
| டாக்டர் மு. வ. வின் கடிதங்கள் —டாக்டர். முத்துசண்முகனுர், மோகன் | 6 | 00 |
| ஒப்பியல் நோக்கில் சங்ககாலம்—கதிர் மகாதேவன் | 10 | 00 |
| மொழியியல் விளையாட்டுக்கள்—தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் | 4 | 50 |
| குடும்ப விளக்கு - ஒரு திறனுய்வு—கோ. கண்ணன் | 5 | 00 |
| கள்ளோ காவியமோ - திறனுய்வு—S. வளவன் | 1 | 85 |
| The Founding of Madras—N. S. Ramaswamy | 15 | 00 |
| Glimpses of Tamil Culture based on Periya puranam —Dr. K. Nambi Arooran | 25 | 00 |
| Foreign models in Tamil grammar —Dr. T. P. Meenakshi Sundaram | 30 | 00 |
| Tradition and talent in Cankam poetry —Dr. Tamizhannal | 45 | 00 |
| The Language of Sangam literature and Tolkappiyam —Dr T. N. Natarajan | 50 | 00 |
| Inscriptional Tamil—Dr. A. Velu Pillai | 80 | 00 |
| A linguistic study of early manipravalam—Dr. Ratnamma | 50 | 00 |
| History and Culture of the Tamils—Dr. T. Natarajan | 5 | 00 |
| A History of the Maravas—Dr. S. Kathirvel | 50 | 00 |
| Trends in Tamilnad Politics during the emergency —Krishnabhai Nambiar | 3 | 00 |
| The caste system in Tamil Nadu—K. K. Pillai | 4 | 00 |
| Christianity of Tamil Culture—Ignatius Hirudayam | 8 | 00 |
| Islam Indian religions & Tamil culture —S. M. Sulaiman & M. M. Ismail | 8 | 00 |
| The art of India—C. Sivaramamurthi | 450 | 00 |

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.